# சமாதானம் வென்றது

# இந்தோ-சீனாவில் யுத்த நிறுத்தம்

சமாதான சங்கநாதம் முழங்குகிறது இந்தோ-சீனத்திலே! எட்டாண்டு யுத்தத்தின் இறுதிச் சடங்கு! எண்ணற்ற உயிர்களைக் குடித்த கோர யுத்தத்திற்கு முடிவு கண்டனர். யுத்த வெறியர்களின், கலோனியப் பித்தர்களின் பேய்த்தனம் ஓய்ந்தது விழிப்புற்ற, சுதந்திரதாகம் கொண்ட, அதற்காக ரத்தம் சிந்தியும் போராடத் திடசித்தம் கொண்ட ஆசிய மக்களின் மகத்தான வெற்றியே இன்றைய யுத்த நிறுத்தம்.

உலகச் சரித்திரத்தின் பொன் ஏடுகளில் பொறிக்கப்பட வேண்டிய, மனிதச் சரித்திரத்தின் திரும்பு முனையாக உள்ள முடிவே ஜினிவாவில் கையெழுத்தான சமாதான ஒப்பந்தம்.

ஆசிய மக்களின் கதியை மேற்கு ஐரோப்பிய ஏகாதிபத்திய வல்லரசுகள் நிர்ணயித்த காலம் மலையேறி விட்டது. ஆசிய மக்களின் கதியை ஆசியர்கள்தான் நிர்ணயப்பார்கள் என்று தலைநிமிர்ந்து மார்பு தட்டிப்பேசும் ஆசியர்களின் வெற்றியே ஜினிவா ஒப்பந்தம்.

'நாகரீக மற்ற ஆசியர்களுக்கு, நாகரீகம் கற்றுக்கொடுக்க வந்த ரட்சகர்கள் நாங்கள்' என்று திமிருடன் பேசிக்கொண்டு 200, 300 ஆண்டு காலமாக ஆசிய மக்களை சொல்லொணா இன்னல்களுக்கு உள்ளாக்கிய மேற்கத்திய வெள்ளை ஏகாதிபத்தியங்களுக்குக் கிடைத்த மற்றொரு மரண அடியே இந்தோ-சீன ஒப்பந்தம்.

### யுத்த வெறியர்களின் படுதோல்வி

பயங்கர நவீன ஆயுதங்களை உபயோகித்து, அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டு ஆகிய நாச நாச சக்திகளைக்கொண்டு ஆசிய மக்களை மீண்டும் பல நூற்றாண்டுகளுக்கு அடக்கி ஒடுக்கிவிடலாம் என்று ஆசைக்கனவு கண்ட அமெரிக்கப் பேய்களுக்குக் கிடைத்த மற்றொரு மரண அடியே ஜினிவா ஒப்பந்தம்.

நவ சீனாவை அங்கீகரிக்க மாட்டோம்; யார் இந்தச் சௌ-என்-லாய் என்று திமிருடன் பேசிய டல்லசுக்கும், 'வியட்மின்' வீரர்களை ஒரு கொள்ளைக் கூட்டமென்று கள்ளப் பட்டம் கட்ட நினைத்த பிரெஞ்சு ஏகாதிபத்தியத் திமிருக்கும் கிடைத்த அடி அந்த ஒப்பந்தம்.

அதே சௌ-என்-லாய்க்கும், வியட்மின்னுக்கும் சம அந்தஸ்து அளித்து ஒப்பந்தம் செய்யும் நிர்ப்பந்தம் ஏற்பட்டது, ஆசிய மக்களின் மகத்தான வெற்றி.

இந்தோ சீன யுத்த நிறுத்தத்தை மேற்பார்வை இடவும், அங்கு தேர்தல் நடத்தி, மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் சர்க்கார் கையில் அதிகாரத்தை ஒப்படைக்கவும் நிறுவப்பட்ட போலந்து, கனடா, இந்தியா ஆகிய மூன்று தேசங்களடங்கிய கமிஷனுக்கு இந்தியா தலைமை வகிக்கும் பொறுப்பளிக்கப் பட்டிருப்பது, புதிய ஆசியாவின் எழுச்சியை அங்கீகரித்திருப்பதற்கு அத்தாட்சி. கும்பகர்ணன்போல் தூங்கிக் கொண்டிருந்த ஆசியா வல்ல, இன்றைய ஆசியா என்பதை அங்கீகரித்திருப்பதின் அத்தாட்சி அது.

### ஒப்பந்த ஷரத்துகள்

ஒப்பந்தத்தின் ஷரத்துக்களின் படி, இந்தோ சீனத்தில் யுத்த நிறுத்தம் உடனடியாக அமுலுக்கு வரும். ஹனாய், ஹைப்பாங் உள்ளிட்ட வியத்நாமின் வட பகுதியில், அதாவது 17வது பூகோள அட்சரேகைக்கு வடக்கே வியத்மின் படைகளிருக்கும். அதற்கு தெற்கே பிரெஞ்சுப் படைகள்

(11-ம் பக்கம் பார்க்க)

வில‌ை 3 அணா | Phone : 85777 | இலங்கையில் 25 சத

ஜனசக்தி

(கம்யூனிஸ்ட் கட்சி வார இதழ்)

மலர் 10] ஞாயிறு 25—7—54 [இதழ் 44

### குடியாத்தத்தில் போலீஸ் மந்திரி காமராஜ்

பார்த்தாலே... தெரியுதே

தெரியுது — தெரியுது —

ஓட்டுச் சாவடிக்கு வாங்கோ எனக்குத்தான் உங்கள் ஓட்டு என்பது நன்றாகத் தெரியும் ---- --- நான் ஓர் ஏழைப் பங்காளன் அல்லவா!

S. R

# நியாயமான, நேர்மையான தேர்தல் வேண்டும்

சென்னை ராஜ்ய சட்ட சபையின் எதிர்க்கட்சி உபதலைவர் தோழர் எம். கல்யாணசுந்தரம், குடியாத்தம் தொகுதியில் தலையிடும் முதலமைச்சரையும் ரெவினியூ மந்திரியையும் வன்மையாகக் கண்டித்து அறிக்கை விட்டுள்ளார்:

"குடியாத்தம் தொகுதியில் காங்கிரஸ் டிக்கெட்டில் ஸ்ரீ காமராஜ் நாடாரே போட்டியிடுகிறார் என்ற முறையில், இந்த தேர்தலானது விசேஷ முக்கியத்வமுடையதாகும்.

ராஜ்ய போலீஸ் இலாகாவுக்குப் பொறுப்புதாரியாயிருக்கும் காமராஜரும், ரெவினியூ நிர்வாகத்துக்கு பொறுப்பாயிருக்கும் மாணிக்கவேலரும் தேர்தல் இயக்கத்தில் ஈடுபட்டிருப்பதால், போலீஸ் அதிகாரிகளும் ரெவினியூ அதிகாரிகளும் காங்கிரசுக்கு ஆதரவாக இருக்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டிருக்கிறார்களென்று நாங்கள் குற்றம் சாட்டுகிறோம். கிராமாதிகாரிகளும், போலீஸாரும், ரெவினியூ அதிகாரிகளும் முதலமைச்சருக்கு மறைமுகமாக வேலை செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஓட்டு வேட்டையாடுவதற்காக, ரோடு போடுகிறேன். கிணறுகள் வெட்டித் தருகிறேன் என்றெல்லாம் ஆசை வார்த்தைகளைக் கொட்டுகிறார்கள். அது மாத்திரமல்ல முஸ்லிம் மக்களெல்லாம் காங்கிரஸுக்கே ஓட்டுப் போட வேண்டுமென்று மதத்தின் பேரால் முஸ்லீம் லீக் தலைவர்கள் தூண்ட வேண்டுமென்றும்—அப்படித் தூண்டினால், பெரிய பெரிய தோல்-ஷாப் முதலாளிகளாகவுள்ள அந்த லீக் தலைவர்கள், சர்க்காருக்குச் செலுத்த வேண்டிய ஒரு கோடி ரூபாய்க்கு மேற்பட்ட விற்பனை வரி பாக்கியைக் குறைத்து விடுகிறேன் என்றும், முதலமைச்சர் பேரம் பேசி வருவதாகவும் பலத்த வதந்தி அடிபடுகிறது. தேர்தல்நாள் நெருங்க நெருங்க, முதலமைச்சரும் அவரது ஆப்த நண்பரான ரெவினியூ மந்திரியும் கண்மூடித்தனமான காரியங்களில் இறங்குகிறார்கள். பொது மக்களைத் தூண்டுகிற வேலையில் தோல்வியடைந்தவுடன், ரெவினியூ அதிகாரிகளும், கோவாப்பரேடிவ் பேங்க் ஆபீசர்களும் மக்களை மிரட்டுவதிலும் நிர்ப்பந்திப்பதிலும் இறங்கி யிருக்கிறார்கள்.

அதுமட்டுமல்ல. கம்யூனிஸ்ட் கட்சிக்கு விரோதமாக எல்லாவிதமான அவதூறுகளையும் குற்றச் சாட்டுகளையும் பொழிவதில் முதலமைச்சர் முன்னணியில் நிற்கிறார். ஒரு ஆதாரமாவது காட்டி நிரூபிக்க வேண்டுமேயென்ற அக்கரை அவருக்கு கிஞ்சித்தும் கிடையாது. கம்யூனிஸ்ட் கட்சியை ஆதரிப்பவர்களை காங்கிரஸ் தொண்டர்கள் தாக்கினாலும் சரி, கொடிகளை இறக்கியும், போஸ்டர்களைக் கிழித்தும் அக்கிரமம் செய்தாலும் சரி, போலீசார் பேச்சு மூச்சின்றி மௌனமாக இருக்கிறார்கள். ஏதாவது அவர்கள் நடவடிக்கை எடுத்தால், அது கம்யூனிஸ்டுகளுக்கு எதிராகத்தான் எடுக்கப்படுகிறது. கே. வி. குப்பம் என்ற கிராமத்திலே 16-7-54-ல் முதலமைச்சரும் ரெவினியூ மந்திரியும் முகாம் போட்டிருந்தார்கள். அன்று கம்யூனிஸ்ட் ஆதரவாளர்கள் நடத்திய ஊர்வலத்தை ஸ்தல காங்கிரஸ் வாதிகள் தாக்கினார்கள். ஊர்வலத்தில் கலந்துகொண்ட ஒவ்வொருவரும் அடிக்கப்பட்டார்கள். கொடிகள் கிழிக்கப்பட்டன. இதையெல்லாம் போலீஸ் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறது. கடைசியில் கம்யூனிஸ்ட் ஆதரவாளர்களைக் கைது செய்தது. கம்யூனிஸ்ட் ஆதரவாளர்களைத் தாக்கிய காங்கிரஸ்காரர் மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

ஜனப்பிரதிநிதித்துவச் சட்டத்துக்கு விரோதமான இத்தகைய சம்பவங்கள் அதிகரித்து வருகின்றன. ராஜ்ய முழுவதுமுள்ள ஜனநாயகவாதிகள், குடியாத்தம் மக்களுக்கு சகல விதமான உதவிகளும் செய்து கம்யூனிஸ்ட் அபேட்சகர் கோதண்டராமனையும், தாழ்த்தப்பட்டோர் சம்மேளன அபேட்சகர் கிருஷ்ணசாமியையும் வெற்றி பெறச் செய்வார்களாக. அதிகாரத்தில் அமர்ந்துகொண்டு, ஜனநாயகத்தைக் காலடியில் போட்டு மிதித்துத் துவைக்கும் பேர்வழிகளுக்கு தக்க பாடத்தைக் கற்பிக்க முன்வருமாறு ராஜ்ய மக்களை வேண்டிக்கொள்ளுகிறேன்.

குடியாத்தம் தொகுதி வாக்காளர்களே

## 1-8-54ல் நடைபெறும் உபதேர்தலில்

தோழர் வி.கே.
கோதண்டராமனுக்கு
கதிர் அரிவாள்
பெட்டியிலும்

★

ரிசர்வ் தொகுதியில்
தோழர் எம்.
கிருஷ்ணசாமிக்கு
யானைப்
பெட்டியிலும்
உங்கள் ஓட்டுகளை
போடும்படி
கேட்டுக்கொள்கிறோம்

**தலையங்கம்** 25-7-54

# தமிழக விவசாயிகள் மாநாடு

இவ்வாண்டு தமிழக விவசாயிகள் மாநாடு திண்டுக்கல்லில் கூடுகிறது. போர்க் கோஷங்களுடன் உரிமை முழக்கத்துடன் தமிழக விவசாயிகள் கூடும் ஆருவது மகாநாடு இது.

இதுவரை நடந்த மகாநாடுகளை விட ஒரு விதத்தில் இது தனிச்சிறப்பு வாய்ந்ததென்றே கூறவேண்டும்.

எவ்விதமென்ருல் முதலில், தாலுக்காவாரியாக விவசாயிகள் மாநாடுகள் நடைபெற்றன. அதன் பிறகு தாலுக்கா மாநாடுகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் ஜில்லா வாரியாக மாநாடுகளில் கூடி பல்லாயிரக் கணக்கான விவசாயிகள் முன்னிலையில் ஜில்லா ரீதியான பிரச்சனைகளையும் பொதுவான பிரச்சனைகளையும் விவாதித்து முடிவு கண்டனர். அதன் பின்னர் இன்று திண்டுக்கல்லில் ஜில்லா மாநாடுகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் கூடி தமிழக விவசாயிகளின் பிரச்சனைகளை மூன்று நாட்கள் விவாதித்து முடிவெடுக்கப் போகின்றனர்.

ஒடுக்கப்பட்ட சாதாரண விவசாய மக்களின் ஒற்றுமை சக்தி எவ்விதம் கீழே இருந்து மிகப் பரந்த ஜனநாயக முறையில் ஸ்தாபன ரீதியாக உருவாகியுள்ளது என்பதையே ஜில்லாக்களிலும் இன்று திண்டுக்கல்லிலும் நடக்கும் மகாநாடுகள் எடுத்துக் காட்டுகின்றன. இவ்விதம் தேர்ந்தெடுக்கப்பட்ட சுமார் 250 பிரதிநிதிகளும், நூற்றுக் கணக்கான பார்வையாளர்களும், பத்தாயிரக் கணக்கில் விவசாயிகளும் அங்கு அணி திரளுகின்றனர்.

நிலப்பிரபுக்கள் முன்பும், அவர்களைப் பாதுகாக்கும் அரசாங்கத்தின் முன்பும் விவசாயப் பெருங்குடி மக்கள் கைகட்டி, வாய் பொத்தி நின்றனர் அன்று. வாயில்லா பூச்சிகளாக உழைத்துழைத்து ஒரு பலனும் காணுது விதியை நொந்துகொண்டு மதியைப் பறிகொடுத்து மடிந்தனர் அன்று.

அந்த காலம் இன்று மலையேறி விட்டது. தன்னுணர்வு பெற்று விட்ட, தன் சக்தியை உணர்ந்து விட்ட விவசாயிகளின் பேரெழுச்சி இன்று. இதைப் பிரதிபலிக்கும் போராட்ட கேடயமாகவே விவசாயிகள் சங்கம் விளங்குகிறது. ஜாதி, மத, இன, பேதமில்லாது சகலரையும் ஒன்று சேர்த்து விவசாயிகளின் உரிமைக்காக போராடி வெற்றிமேல் வெற்றி கண்டுவரும் சக்தி விவசாய இயக்கம்.

சென்ற ஓராண்டு சாதனைகளே விவசாயிகளின் ஒன்றுபட்ட சக்தியின் மகத்துவத்தை வலியுறுத்துகின்றது.

தஞ்சை விவசாயிகள் சட்டபூர்வமாக சில உரிமைகளை அடைவதற்குக் காரணமாக இருந்தது விவசாய இயக்கம். சென்ற ஆண்டில் ராஜாஜி ஆட்சியின் சண்டித் தனத்தைத் தகர்த்து சிதம்பரத்திற்கும் தஞ்சைச் சட்டம் விஸ்தரிக்கப் படச் செய்தது விவசாயிகள் சங்கத்தின் கீழ் நடந்த போராட்டம். பல ஆண்டுகளாக பஞ்சத்திலடிபட்டு தாங்க முடியாத கடன் சுமையால் முதுகொடிந்த விவசாயிகளுக்கு விவசாயக் கடன் ஒத்திவைப்புச் சட்டம் வரும்படி செய்தது விவசாய சங்கக் கொடியின் கீழ் நடந்த மகத்தான கிளர்ச்சி.

இன்று நிலமிழந்து தவியாய்த் தவிக்கும் விவசாயிகள் மேலும் மேலும் தீவிரமான போராட்டங்களில் இறங்கத் தயாராகின்றனர். விவசாய சங்க வழிகாட்டுதலின்பேரில் மதுரை ஜில்லாவிலும் மற்ற இடங்களிலும் தரிசு நிலத்தில் நேரடியாக விவசாயிகள் இறங்கி உழுது பண்படுத்த ஆரம்பித்து விட்டனர். இந்த தைரியத்தையும், உறுதியையும், நியாயத்தையும் ஊட்டியது விவசாய இயக்கம்.

விவசாயிகளே இன்று தரிசு நிலத்தை எடுத்து பங்கிட்டுக்கொண்டு உழ ஆரம்பித்துவிட்ட பிறகுதான் தரிசு நிலத்தை விவசாயிகளுக்கே கொடுக்க சர்க்கார் யோசித்து வருவதாகக் கூறுகிறது. அவர்கள் யோசித்துக் கொண்டு இருப்பதின் அர்த்தம் விவசாயிகள் வாழாமல் செய்வதற்கான தடங்கல்களை செய்வர் என்பதுதான் விவசாயிகளின் பாடம். தங்கள் சக்தியிலேயே நம்பிக்கையை வைத்து மேலும் மேலும் விவசாய இயக்கத்தை விரிவுபடுத்துவதே இறுதி வெற்றிக்கான வழி.

நிலத்திற்கு உயர்ந்த பட்ச எல்லை வகுக்க வேண்டும் என்பது இன்று இந்தியா வெங்கும் விவசாயிகள் கோரும் கோரிக்கை. இந்த உயர்ந்த பட்ச எல்லைக்கு அதிகமாக உள்ள நிலப்பிரபுக்கள் நிலத்தை எல்லாம் எவ்வித நஷ்டஈடுமின்றி எடுத்து விவசாயிகளுக்குப் பகிர்ந்து கொடுக்க வேண்டும். இதற்குக்குந்தகமாக இந்திய அரசியல் சட்டத்தின் 31 விதி இருப்பதால் அதை இனியும் தாமதிக்காமல் திருத்தவேண்டும். திண்டுக்கல் மகாநாடு நிலவரம்பு வகுக்கும் கோஷத்திற்கு திட்டவட்டமான உருவம் கொடுக்குமென எதிர்பார்க்கிறோம்.

மேலும், வாரம் குத்தகையில் விவசாயிகளின் பங்கை 75 சதவிகிதமாக உயர்த்தினுல்தான் 100க்கு 80 பங்கு மக்களாக உள்ள விவசாயிகளின் வாங்கும்சக்தி உயரும். நாட்டின் நெருக்கடி தீர எடுக்கவேண்டிய முதல் நடவடிக்கை இது. இதற்காகவே கம்யூனிஸ்டு எம்.எல்.ஏ.க்கள் வரப்போகும் சட்டசபையில் வாரம் குத்தகை நிர்ணயிப்பு, நிலவெளியேற்றத் தடுப்பு மசோதாவை பிரேரேபிக்கப் போகிறூர்கள். இந்த மசோதாவிற்கு ஆதரவாக விவசாயிகள் சக்தியைத் திரட்ட திண்டுக்கல் மகாநாடு திட்டமிடும் என எதிர்பார்க்கிறோம்.

மேலும், கடன்ஒத்திவைப்புச் சட்டத்தை இன்னும் இரண்டு வருஷத்திற்கு ஒத்திவைக்கவும், தரிசுநிலத்தை விவசாயிகளுக்குப் பங்கிடவும் கொண்டு வரப்படும் கம்யூனிஸ்டு மசோதாவிற்கு ஆதரவு திரட்டவும் மாநாடு திட்டமிடுமென்று எதிர்பார்க்கிறோம்.

1943ல் சின்னஞ்சிறு சக்தியாக, விவசாய மக்களின் நீண்ட நெடும் துயர சரித்திரம் என்ற இருட்டில் சிறு ஒளி போன்று தோன்றிய தமிழ்நாடு விவசாய சங்கம் இன்று ஒரு லட்சத்திற்குமேல் உறுப்பினர்களைக் கொண்ட, தமிழகமெங்கும் வியாபித்துவிட்ட மகத்தான சக்தியாக விளங்குவதைக் கண்டு ஜனநாயகவாதிகள், முற்போக்காளர் உள்ளப்பூரிப்படைவர் என்பதில் சந்தேகமில்லை.

இந்த சக்தி மேலும் மேலும் வளர்ந்து நம் நாட்டுத் தொழிலாளரியக்கத்தின் தலைமையில் அவர்களுடன் இணைந்து போராடத் திட்டமிடுவதே மக்கள் ஜனநாயக வாழ்வு தழைப்பதற்கான, நல்வாழ்வு மலர்வதற்கான சிறந்த வழி.

அந்தப் பாதையில் திண்டுக்கல் ஒரு மைல்கல்லாக விளங்கவேண்டுமென்று வாழ்த்துகிறோம்.

## வாரக் குறிப்புகள்

# இந்தியர்களை வெளியேற்ற இந்திய சர்க்கார் உடந்தை

இலங்கையில் பிழைப்புத் தேடி வர்த்தகத்திலும் வேறு பல துறைகளிலும் ஈடுபட்டுள்ள சுமார் 1½ லட்சம் இந்தியர்களின் பாடு பஞ்சு படும் பாடாக, நெஞ்சு குமுறச் செய்யும் நிலைகுலைந்த கதியாகக் காட்சியளிக்கிறது. இவர்கள் தற்கால வாசிகள் என்று கருதப்படுகிறூர்கள். இவர்கள் இன்று செய்து வரும் வேலைகளை இலங்கையர்கள் செய்ய முடியும் என்று காரணங் காட்டி ஆயிரம் ஆயிரமாக இலங்கையைவிட்டு வெளியேற்ற இலங்கை சர்க்கார் திட்டம் வகுத்திருக்கிறது. மூன்று மாதகாலத்திற்குள் வெளியேற வேண்டும் என்று ஏற்கெனவே மூவாயிரம் பேர்களுக்கு நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த 'அருந்தொண்டை' வெற்றிகரமாகச் செய்து முடிப்பதற்கு இலங்கையிலுள்ள இந்திய சர்க்காரின் ஹைகமிஷன் காரியாலயம் ஒத்துழைப்பைத் தருகிறது.

இந்தியர்களை வெளியேற்ற இந்திய சர்க்கார் உடந்தை! என் இந்தக் கோடரிக் காம்பு வேலை? தற்காலிக வாசிகளைப் பலி கொடுத்தால், நிரந்தரவாசிகளின் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள இடம் கிடைக்கலாம் என்று சாதுர்யமாக வாதிக்கப்படுகிறது. ஆனல் இது வெறும் ஊமையன் கண்ட கனவாக மாத்திரமே முடியும். புது டெல்லி ஒப்பந்தம் பிரசவித்த ராக்ஷஸக் குழந்தைதான் இந்தத் தீர்ப்பு. இதன் சாபக் கேட்டால் ஆயிரக் கணக்கான குடும்பங்கள் வேலை யிழந்து, வருமானம் பறிபோய் பிழைக்க வழியின்றிப் பிறந்த நாட்டுக்கு அகதிகளாக வந்து குவியும் அதிபரிதாப விளைவுகளைக் காணலாம்.

வாக்குரிமை-பிரஜா உரிமைகள் மறுக்கப்பட்டு, பங்கீட்டரிசி இலவசக் கல்வி போன்ற சர்வ சாமான்யமான வசதிகளுங்கூட மறுக்கப்பட்டு எல்லையற்ற தொல்லைகளுக்கு ஆளாகின்ற தற்கால வாசிகள் பிழைப்பிலேயே பிடி மண்ணைப்போடுகிறது இந்தப் போக்கு. இலங்கை இந்தியர் பிரச்சினைகள் பற்றி சர்ச்சைகள் நடந்த காலங்களில் எல்லாம் முன்னுள் இலங்கைப் பிரதமர்கள் திரு. டி. எஸ். சேனுநாயகா, டட்லி சேனுநாயகா இருவரும் தற்காலவாசிகள் தொழில் வர்த்தகம் நடத்துவதை அனுமதிப்பதாக உறுதி கொடுத்திருக்கிறூர்கள்.

1944ம் ஆண்டு ஜனவரி மாதம் தொட்டு இலங்கையில் தொடர்ந்து வாழ்பவர்களுக்கு (Temporary Residence Permit) தற்கால வாச பர்மிட் கொடுப்போம். நியாயமான அத்தாட்சிகளின் அடிப்படையில் அவற்றைப் புதுப்பித்து நீடிக்க அனுமதிப்போம் என்றும் உறுதியளித்திருக்கிறூர்கள்.

இந்த வாக்குறுதிகளுக்கு முற்றிலும் முரணுக மட்டுமல்ல, மனிதத் தன்மைக்கே ஒவ்வாத முறையில் தான்தோன்றித்தனமாகத் தற்கால வாசிகளை வெளியேற்றும் நடவடிக்கைகளைத் துவேஷ உணர்ச்சியுடன் தொடங்கியுள்ளது இலங்கை சர்க்கார். இதற்குத் துணை போகிறது இந்திய சர்க்கார்.

இந்த அநீதியை எதிர்த்து மக்கள் குரலெழுப்பியாக வேண்டும். அணை கடந்துவரும் வெள்ளம் போல அகதிகளாக நமது மக்கள் நம் நாட்டுக்குத் திரும்பும் நிலை நாட்டை எவ்வளவு தூரம் பாதிக்கும் என்பதைக் காணவேண்டும். எனவே, இத்தகைய நடவடிக்கைகளுக்கு இடமளித்த புது டெல்லி ஒப்பந்தத்தைக் கிழித்தெறியவும், தற்கால வாசிகளின் நலவுரிமைகளைப் பாதுகாக்கவும் இலங்கையில் ஜனநாயக சக்திகள் நடத்தி வரும் கிளர்ச்சிகளை ஆதரிப்பதோடு, நம் நாட்டில் இதன் உண்மைகளை எடுத்துக்கூறி வெகுஜன அபிப்பிராயத்தைத் திரட்டி சர்க்காரை நிர்ப்பந்திக்க இயக்கம் நடத்தவேண்டும்.

### வெற்றிகரமான ஹர்த்தால்

இலங்கை வாழ் இந்திய மக்களுக்கு எதிராக உருமிக்கொண்டு வரும் ஜன விரோதச் சட்டங்களை எதிர்த்துத் தமது கண்டனத்தை தெரிவிப்பதற்காக ஜூலை 6-ந் தேதி சுமார் ஆறு லட்சம் தோட்டத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர் இலங்கை ஜனநாயக காங்கிரஸின் அறைகூவலை ஒட்டி நடந்தது இவ்வேலை நிறுத்தம். இதில் சுமார் நாற்பதாயிரம் சிங்களத் தொழிலாளர்கள் பங்குகொண்டனர். இந்தியருக்கு விரோதமாக சிங்கள மக்களைத் தூண்டிவிட வகுப்பு வாத விஷமிகள் செய்த முயற்சி மண் தின்றது. இலங்கை இந்தியர் உரிமை விஷயத்தில் இலங்கை வெகுஜனங்கள் மேலதிகமான அக்கறை காட்டி வருவது நாளுக்கு நாள் பிரத்தியட்சமாகி வருகிறது.

கே. ராமநாதன்

# மாஹி விடுதலை

இந்தோ-சீன சமாதான உடன்பாட்டு செய்தி சகல ஆசிய மக்களும் உள்ளப் பூரிப்புகொள்ளச் செய்கிறது. அதேசமயத்தில் நூற்றூண்டுக்கணக்கில் அதே பிரெஞ்சு ஏகாதிபத்திய பிடியிலிருந்த இந்தியப் பகுதியான மாஹே மக்கள் விடுதலை வெற்றிமுரசு கொட்டுவதைக் கேட்டுப் போனந்தம் கொள்வர். மாஹே மக்கள் கட்சி பேதம் காட்டாது தேசபக்தி ஒன்றே பெரிதெனக் கருதி ஒன்றுபட்டு தியாகங்களை பொருட்படுத்தாது உறுதியுடன் போராடி இன்று வென்றனர்.

இத்தருணத்தில் அந்த இரு தேசபக்தர்களின், வீரத் தியாகிகளின், பிரெஞ்சு குண்டடியில் மாண்ட ஆனந்தன், அச்சுதன் என்ற இரு போர்வீரர்கள் விடுதலைக்காக உயிரை அர்ப்பணித்ததற்காக நன்றிகலந்தவணக்கம்செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம். கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்த இந்த இரு வீரர்கள் விடுதலைப்பணிக்கு உயிர்தியாகம் செய்யவும் தயங்கவில்லை என்பதைக் கண்டு கம்யூனிஸ்டு கட்சி பூரிப்படைகிறது.

மாஹே விடுதலையைப் போன்றே துரிதமாக தமிழகத்திலுள்ள மற்றயிரு திட்டுகளும் விடுதலை பெறவேண்டும்.

மீண்டும் பேச்சுவார்த்தைகள் துவக்கப்படும் என்று நப்பாசை காட்டும் பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தின் சாகசங்களைக் கண்டு யாரும் ஏமாந்துபோகக் கூடாது. இது சென்றகாலப் படிப்பினை. உறுதியுடன் போராடினுல் ஏகாதிபத்தியம் பணியும் என்பதே இந்தோ-சீனப் படிப்பினை. எனும், மாஹே விடுதலையின் படிப்பினை நம் மக்கள் சக்திதான் நமக்கு வெற்றி தருமே ஒழிய, மெண்டஸ் பிரான்ஸ் ஆட்சி நல்ல காரியம் செய்யும் என்ற பிரேமை எதுவும் தோன்றினுல் அது நமது வெற்றிக்கு வழிகோலாது.

பாண்டியிலும், காரைக்காலிலும் வீரதீரமுடன் தேசபக்தர்கள் ஒன்றுபட்டுப் போராடுவதே இறுதி விடுதலைக்கான உறுதியான வழி என்ற நம்பிக்கையில் கிஞ்சிற்றேனும் தளர்ச்சி ஏற்படக் கூடாது.

# டிராம்வே முதலாளியை தடுத்து நிறுத்துக

திமிர் பிடித்த டிராம்வே வெள்ளை முதலாளி புரூக்ஸ் டிராம்களை எல்லாம் உடைத்து துருப்பிடித்த இரும்பு சாமான் விலைக்கு பம்பாய் முதலாளி ஹசன் அலி என்ற முதலாளியிடம் ரூ. 4 லட்சத்திற்கு விற்பதாக நம்பகமாகத் தெரிகிறது.

சென்னை நகர மக்கள், தொழிலாளர்கள், சர்வ கட்சியினர் டிராம்வே போக்குவரத்தை விரும்பிக் கிளர்ச்சி செய்து வருகையில், காங்கிரஸ் ஆட்சியாளர் கடந்த 16 மாதங்களாக காலங்கடத்தி வந்தனர். காங்கிரஸ் சர்க்காரின் தொடை நடுங்கித்தனமே இன்று வெள்ளை முதலாளி புரூக்ஸுக்கு இவ்வளவு திமிரை ஊட்டியுள்ளது என்பதில் சந்தேகமில்லை.

முதல் மந்திரி ராஜாஜி கூறியதை மீறி டிராமை அடியோடு நிறுத்தினுன், அதே வெள்ளையன் புரூக்ஸ் இன்று முதல் மந்திரி காமராஜ் டிராம் ஓடுவதுபற்றி கடந்த 3 மாத காலமாக சிந்தித்துக்கொண்டே இருப்பதாக சொல்லி வருகிறூர். நடவடிக்கை இல்லை. இந்த சமயத்தில்தான் டிராம்களை உடைத்து விற்க முன்வந்திருப்பதைப் பார்க்கிறோம்.

டிராம்வே தொழிலாளர்களுக்கும், கார்ப்பரேஷனுக்கும், சென்னை சர்க்காருக்கும், சென்னையிலுள்ள சில கடன்காரர்களுக்கும் லட்சக் கணக்கான ரூபாய்கள் முதலாளி கொடுக்க வேண்டும். ஆனல் அவர்கள் அனைவருக்கும் நாமம் சாத்திவிட்டு, டிராம்வே சொத்து பத்துகளை அவன் இஷ்டம்போல் விற்று, பணத்தை சுருட்டிக்கொண்டு லண்டன் போகலாமென்று முன் வருவதாகத் தெரிகிறது. காங்கிரஸ் ஆட்சியாளர், டிராமை ஓட்டுவதாக பகிரங்கமாகக் கூறிய முதல் மந்திரி காமராஜர் வேடிக்கை பார்ப்பதன் ரகசியந்தான் என்ன?

டிராமை உடைத்து விற்க மளவிற்கு வெள்ளை முதலாளி வருவதை இனி அனுமதிக்க முடியாது.

காமராஜர் முதல் மந்திரியாக வந்து 3 மாதத்திற்கு மேலாகியும், ஒரு வெள்ளை முதலாளி நிர்வாகத்தில் மூடப்பட்டிருக்கும் டிராமை சர்க்காராலேயே எடுத்து நடத்த முடியவில்லை என்ருல் இது கண்டிக்கத்தக்கது.

சகல பகுதி மக்களும் கடந்த 16 மாதங்களாகக் கோரிவரும் டிராமை நடத்த காங்கிரஸ் சர்க்கார் அதிகாரத்தைப் பிரயோகிக்க தயங்குவானேன்?

டிராமை உடனே நடத்தவேண்டும், போக்குவரத்து நெருக்கடியைப் போக்கவேண்டும். டிராமை உடைத்து விற்க முன்வரும் வெள்ளையன் புரூக்சை சிறையில் தள்ளவேண்டும். இதை விட்டுவிட்டு, ரூ. 30 லட்சம், 50 லட்சம் என்று வெளிநாடுகளில் பஸ் வாங்குவதற்காக வரிப் பணத்தை அநியாயமாக செலவிடுவது அநியாயம். அக்கிரமம் மக்களுக்குச் செய்யும் துரோகம்.

## கட்சி நிதி

ஜனசக்தி உதவி ஆசிரியர் ஐ. மாயாண்டி பாரதிக்கும் எட்டயபுரம் பொன்னம்மாளுக்கும் 11-7-54ல் மதுரையில் திருமணம் நடைபெற்றபோது தம்பதிகள் தந்த கட்சிநிதி ரூ 2-0-0 வரப் பெற்ருேம்.

நியூ ஏஜ் குறிப்புகள்

# பக்ரா-நங்கல் அணை

## போதிக்கும் பாடம்

பக்ரா—நங்கல் அணைக்கட்டு திட்டத்தில் வேலை செய்த இஞ்ஜினீர்களையும், யந்திர நிபுணர்கள், தொழிலாளர்களையும் பிரதமர் நேரு போற்றியிருக்கிறார். இந்திய மக்களிடம் பொதிந்து கிடக்கும் அரும்பெரும் திறமைகளை இவ்வளவு காலங் கடந்தாவது அங்கீகரித்திருக்கிறாரே?

அணைக்கட்டு திட்டத்தில் ஈடுபட்டிருந்தவர்களின் வேலை அவ்வளவு சுலபமானதல்ல. அணை கட்டப்பட்டிருக்கும் இடம் மேடும், பள்ளமுமாக மிகவும் கஷ்டமான பிரதேசமாகும். செங்குத்தான மலை உச்சிகளும், வளைந்து நெளிந்து கிடக்கும் மலைத் தொடர்களும், கிடுகிடு பள்ளத்தாக்குகளும் நிறைந்த பிரதேசமாகும். இவைகளையெல்லாம் சமாளித்து, சீர்ப்படுத்தி, அணையைக் கட்டுவது மிகவும் கடின காரியமாகும்.

உலகிலேயே மிகப் பெரிய அணைக்கட்டுகளில் ஒன்றான பக்ரா-நங்கல் அணைக்கட்டில் வேலை செய்த இந்திய இஞ்ஜினீர்களும், இந்திய யந்திர நிபுணர்களும், இந்திய தொழிலாளர்களும், சகல கஷ்டங்களையும் சமாளித்து, போட்ட திட்டத்திற்கு ஒரு வருடம் முன்னதாகவே தங்களுடைய வேலையைப் பூர்த்தி செய்துவிட்டார்கள். இந்திய இஞ்ஜினீர்கள், தொழிலாளர்களின் திறமைக்கு இதைக் காட்டிலும் வேறென்ன எடுத்துக்காட்டு வேண்டும்? இந்த அணைக்கட்டு திட்டத்தை, நாட்டின் வேறுபகுதிகளில் அமெரிக்க 'நிபுணர்'களின் உதவியுடன் நடக்கும் திட்டங்களுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். இதர திட்டங்கள் போடப்பட்ட கால அட்டவணைப்படி நடக்கவில்லை.

நம்முடைய இஞ்ஜினீர்கள், யந்திர நிபுணர்கள், தொழிலாளர்களுக்கு வாய்ப்பும் வசதியும் அளித்தால், அவர்களுடைய முன்முயற்சிகளுக்கு ஊக்கமளித்தால், அவர்களால் சமாளித்து வெற்றிபெற முடியாத கஷ்டம் எதுவுமே இல்லை; அவர்களால் தீர்க்க முடியாத இஞ்ஜினீரிங் பிரச்னை ஒன்றுமே இல்லை.

அணைக்கட்டு திறப்பு விழாவின் போது புகழ்ச்சியாகப் பேசிவிட்டால் மட்டும் போதாது. புகழ்ச்சியான வார்த்தைகளை நடைமுறையில் அமுல் நடத்திக் காட்டினாலொழிய, இதனால் பயனொன்றுமில்லை. "நம் மக்களுக்கு மூளை இல்லை; அறிவுத் திறன் கிடையாது, டாலர் நாட்டிலிருந்து 'நிபுணர்களை' இறக்குமதி செய்யாவிட்டால் நம்மால் பெரிய அணைக்கட்டுகளைக் கட்டவேமுடியாது" என்று தினந்தோறும் நடைமுறையில் தம்பட்டமடிக்கப்படுகிறது. இந்த சூழ்நிலையில் நம்மவர்களைப்பற்றி புகழ்ச்சியாகப் பேசினால்மட்டும் போதாது; நம்மவர்களின் அறிவுத் திறமையை நடைமுறையில் பயன்படுத்தியாகவேண்டும்.

### தியாகம் வீணாகக்கூடாது

இந்த அணைக்கட்டு கட்டும்பொழுது உயிர்நீத்த 60 தொழிலாளர்களின் தியாகச் சின்னத்தை பிரதமர் நேரு திறந்துவைத்தார். கால்வாய் திட்டத்தில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களின் வர்ணிக்கமுடியாத கஷ்டங்களும் அபாயங்களும், அப்பொழுதுதான் இந்திய மக்கள் அனைவருக்கும் நன்கு நிதர்சனமாயின.

தங்களுடைய சகோதர, சகோதரிகள், பஞ்சாபிலுள்ள சாதாரண விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள், இந்திய மக்கள் அனைவரும் சுக சம்பத்துடன் ஆனந்த வாழ்க்கை நடத்துவதற்காக இந்த அறுபது தொழிலாளர்கள் தம் இன்னுயிரையும் ஈந்து, மகத்தான தியாகம் செய்திருக்கிறார்கள்.

புதிய கால்வாய்களில் பாய்ந்தோடிவரும் சட்லஜ் நதித் தண்ணீரால் பல்லாயிரக் கணக்கான ஏக்கர்கள் பண்பட்டு செழிப்பாகும். இந்நிலத்தில் பாடுபட்டுழைக்கும் விவசாயிகளை,—நிலப்பிரபுக்களின் சுரண்டலிலிருந்து பாதுகாக்க வேண்டும். அப்பொழுதுதான் பஞ்சாபிய விவசாயிகளின் இல்லங்களில் சந்தோஷம் பொங்கும். ஏழை எளிய மக்கள் குதூகலமடைவார்கள்.

பஞ்சாப் விவசாயிகளின் வீர புத்திரர்களான அறுபது பேர்களும்செய்த உயிர்த்தியாகம் வீண்போகாது என்று பஞ்சாப் விவசாய இயக்கமும், ஜனநாயக இயக்கமும் கோஷிக்கவேண்டும்; உத்திரவாதமளிக்கவேண்டும்.

### இலங்கைமீது அமெரிக்க நிர்ப்பந்தம்

ரப்பர் விலைகள் தலைகுப்புற விழுந்துவிட்டதால் இலங்கையின் பொருளாதாரம் பூராவும் உடைந்து நொறுங்கும் அபாயம் சென்ற ஆண்டு ஏற்பட்டது என்பது உலகறிந்த விஷயம். தக்க சமயத்தில் இலங்கைக்கு உதவி செய்ய சீனா முன் வந்தது. அரிசி-ரப்பர் பண்டமாற்று ஒப்பந்தத்தை இலங்கையுடன் செய்துகொண்டது. இந்த ஒப்பந்தம் ஏற்பட விடாமல் அமெரிக்கா செய்த முயற்சிகள் தோற்றுவிட்டன.

இந்த ஒப்பந்தத்தை முறிப்பதற்காக எப்படி அமெரிக்கா இன்னும் தொடர்ந்து இலங்கையை நிர்ப்பந்தித்து வருகிறது என்பதை சேனநாயகா பகிரங்கப் படுத்தியிருக்கிறார். இலங்கை சர்க்காரில் மந்திரியாக இருந்த இவர், சமீபத்தில்தான் தன் பதவியை ராஜினாமா செய்துள்ளார். இப்பொழுதுள்ள இலங்கைப் பிரதமர் அமெரிக்காவிற்குத் தொண்டூழியம் புரியத் தயாராயிருக்கிறார் என்பது வெட்ட வெளிச்சமாகிறது.

மந்திரி பதவியை ராஜினாமா செய்த சேனநாயகா ஜூலை 12ம் தேதியன்று ஒரு பொதுக் கூட்டத்தில் பேசுகையில் கீழ்வருமாறு குறிப்பிட்டார்:

"தன்னுடைய கருத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென எங்களை பயமுறுத்தி அமெரிக்காவால் பணிய வைக்க முடியவில்லை. எனவே, எங்களுக்கு உதவி தேவையாயிருக்கிறது என்று அமெரிக்கா திடீரென்று உணரத் தொடங்கிவிட்டது! இதைப் பற்றி ஐசனேவருடன் அளவளாவிப் பேச இலங்கைப் பிரதமர் நியூயார்க் வருவதற்கு முன்னர் ஒரு அவசியமான நிபந்தனையும் இருக்கிறது. அதாவது சீனவுடன் செய்துகொண்டிருக்கும் ஒப்பந்தத்தை முறித்துவிட வேண்டும் என்பதுதான், இல்லாவிடில் இலங்கைக்கு அமெரிக்கா உதவியளிப்பது பற்றிய பேச்சே முடியாது.

"எனவே, வருடா வருடம் சீன

(11-ம் பக்கம் பார்க்க)

# பதில் சொல்கிறோம்

## நடுநிலைமையா? காமராஜர் பல்லவியா?

டி. குருசாமி, காவேரிநகர்,
புதுக்கோட்டை.

**கேள்வி:** குடியாத்தம் தேர்தலில் தி. மு. க. நடுநிலைமை வகிக்கும் என நெடுஞ்செழியன் பேசினரே, உண்மையில் நடுநிலைமை வகிக்கிறார்களா? இவ்விதம் நடுநிலைமை போர்வைக்குள் புகுந்திருப்பதின் நோக்கமென்ன? தி.மு.க. வாலிபர்களும் இதே போக்கில் போவார்களா?

**பதில்:** காங்கிரஸை பகிரங்கமாக ஆதரித்தால், தி. க. தலைவர் பெரியார் மக்கள்முன் அம்பலப்படுத்தப்பட்டு நிற்பதுபோல், இவர்களும் அம்பலப்படுத்தப்படுவார்கள் என்ற பயம் ஒருபுறம்.

அதே சமயத்தில் கம்யூனிஸ்டு கட்சி ஜெயிக்கக்கூடாது. 'பத்தரைமாத்து' திராவிடரான காமராஜர்தான் ஜெயிக்க வேண்டுமென்ற பேராவல் மற்றொருபுறம். இவ்விதம் அவர்களது பீதிக்கும், பேராவலுக்கும் இடையே நடந்த போராட்டத்தின் விளைவுதான் 'நடுநிலைமை'.

உண்மையில் இந்த நடுநிலைமை காமராஜருக்கு செய்யும் மறைமுகச் சேவையாகவே இருந்துவருகிறது. திராவிடப் புகழ் பாடும் தி. மு. க. ஏடுகளான தென்றல், மாலைமணி, 'நம் நாடு' போன்ற பத்திரிகைகள் 'பச்சைத் தமிழர்' வெற்றியை பேராவலுடன் எதிர்பார்ப்பதாக எழுதுகின்றன. அதேசமயத்தில் நடுநிலைமை வேஷமும் போடப்படுகிறது. ஜனநாயகக் கருத்துக்கொண்ட தி. மு. க.விலுள்ள வாலிபர் பலர் இந்த நடுநிலைமை வேஷத்தை வன்மையாக எதிர்ப்பார்கள் என்றே எதிர்ப்பார்க்கிறோம். மக்கள் விரோதப் பாதையில் செல்லும் காங்கிரஸ் ஆட்சியின் பிரதிநிதியை தோற்கடிப்பர் என நம்புகிறோம். ஆரம்பத்திலிருந்து இறுதிவரை அந்த ஆட்சியை உறுதியுடன் ஊசலாட்டமின்றி எதிர்க்கும் கம்யூனிஸ்டு கட்சி அபேட்சகரை வெற்றியடைய செய்வர் என நம்புகிறோம்.

### விடிவிடிய கதை கேட்டபின் . . .

ஜி. எஸ். கோபால், திண்டுக்கல்.

**கேள்வி:** "குடியாத்தம் தொகுதியில் போட்டியிடுபவர்கள் தேர்தலில் எந்தக் கொள்கையின்மீது போட்டியிடுகிறார்கள் என்பது இன்னும் தெளிவாக தெரியவில்லை" என்று தி. மு. மு.வைச் சேர்ந்த,கீழ்த்தரமாக எழுதும் ஏடுகளில் ஒன்றான 'தென்றல்' எழுதியிருப்பதின் காரணம் என்ன?

**பதில்:** விடிய விடிய கதைக் கேட்ட பின் சீதைக்கு ராமன் என்ன வேணும் என்ற கேள்வியைப் போன்றுள்ளது இந்த பத்திரிகையின் கேள்வி.

### நம்பிக்கையில்லை!

எஸ். கே. கோவிந்தன்,
சாமண்டல்லி, மொரப்பூர்.

**கேள்வி:** தொழிலாளிகள், விவசாயிகள் ஆகியோரின் அன்றாட வாழ்க்கைப்போராட்டத்தில் கம்யூனிஸ்டுக் கட்சி பங்குகொள்வது போல், தி. க., தி. மு. க. ஏன் பங்குகொள்வதில்லை?

**பதில்:** அவ்விதப் போராட்டங்களில் அவர்களுக்கு நம்பிக்கையில்லை. திராவிடத்தின் சொர்க்க வாசல் திறந்துவிட்டால் தொழிலாளிகள், விவசாயிகளின் வீடுகளில் பாலும், தேனும் தானகவே வழிந்தோடும் என்பது அவர்களது சித்தாந்தம். அதுவரை தொழிலாளிகளும், விவசாயிகளும் வயிற்றை இறுக்கிக் கட்டிக்கொண்டு இருக்கவேண்டும் என்பது அவர்களது கருத்து.

### தீர்மானங்களும் சர்க்காரும்

எம். தூர்முத்து, சிங்கோனா.

**கேள்வி:** தொழிற்சங்க பொதுக் கூட்டங்கள் தீர்மானம் நிறைவேற்றி அனுப்பினல், நமது அரசாங்கம் எந்த நடவடிக்கையும் எடுக்காமல் இருக்கிறதே! தீர்மானங்களை குப்பைத்தொட்டிகளில் போட்டுவிடுகிறார்களா? இதுதான் காங்கிரஸ் குடியரசின் லட்சணமா?

**பதில்:** ஆம். நீங்கள் தீர்மானத்தை தீட்டி, சர்க்காருக்கு அனுப்புவதில் திருப்தி அடைந்துவிடுவீர்களானல் நிச்சயம் சர்க்காரின் குப்பைத் தொட்டிகளைத்தான் அவை அலங்கரிக்கும். இதில் சந்தேகம் வேண்டாம். உங்கள் தீர்மானத்திற்குப்பின் மக்களது இடையருத கிளர்ச்சி நடந்தாலொழிய, சர்க்காரின் கண்முன் தீர்மானத்திற்கு எவ்வித மதிப்பும் கிடையாது. இன்று இருப்பது முதலாளிகளுக்கு சேவைபுரியும் காங்கிரஸ் அரசாங்கம்! மக்கள் ஜனநாயக அரசாங்கமுமல்ல, சோஷியலிஸ்ட் அரசாங்கமுமல்ல என்பதை நீங்கள் ஞாபகத்தில் கொள்ளுங்கள்.

### மார்க்ஸிய போதனையை புரட்டும் நேரு

பி. ராமசாமி, வெட்டுவாக்
கோட்டை.

கே. வீரபெருமாள், கொழும்பு.

**கேள்வி:** இந்திய கம்யூனிஸ்ட்கள் 90 ஆண்டுகளுக்கு முன்பு எழுதிய, இன்றைய நிலைமைக்குப் பொருந்தாத, மார்க்ஸின் தத்துவங்களை நம்புகிறார்கள். அதனலேயே அவர்களது பாதை பிற்போக்கான பாதையென பண்டிதநேரு கூறுகிறாரே. அவரது கூற்றில் ஏதாவது உண்மையுள்ளதா?

**பதில்:** ஜகஜாலப் புரட்டு பிரசாரம் செய்து மக்கள் கண்ணில் மண் தூவும் வேலையை திறம்பட செய்ய இந்திய பூர்ஷுவா வர்க்கத்திற்கு கிடைத்துள்ள சிறந்த பிரச்சாரகர் நேரு, என்பதையே அவரது அந்தப் பேச்சு பளிச்சென எடுத்துக் காட்டுகிறது.

இதே பண்டித நேரு தனது மகளுக்கு எழுதிய கடிதங்களிலும், தான் சென்ற காலத்தில் கர்ஜித்த கணக்கற்ற பேச்சுக்களிலும், எழுத்துக்களிலும் மார்க்ஸும், லெனினும் காட்டியவழிதான் மனிதவர்க்கத்தை படுகுழியிலிருந்து முன்னேற்றும் கலங்கரை விளக்குப் போன்றது என்று கூறிவந்தார். ஆனல் ஆட்சிபீடத்தில் அமர்ந்தபின் டாட்டாக்களுக்கும், பிர்லாக்களுக்கும், அழகப்ப செட்டியார்களுக்கும், ராஜப்பிரமுகர்களுக்கும் பாதுகாப்பளிக்க சபதமேற்றுள்ள அவர் மார்க்ஸீயத் தத்துவத்தை நிண்டல் செய்ய முனைந்திருக்கிறார். இதில் ஆச்சர்யமென்ன?

காரல்மார்க்ஸோ அல்லது எங்கல்ஸோ, அவர்களது வழியை செழுமைப்படுத்திய லெனினே, ஸ்டாலினே, அல்லது இன்று ஒவ்வொரு நாட்டிலுமுள்ள கம்யூனிஸ்ட் கட்சியோ மார்க்ஸிஸத்தை ஒரு வேதம்போல் கையாள வேண்டுமென்று கூறவில்லை. புதுவாழ்விற்காக போராடும் மக்களின் நடவடிக்கைகளுக்கு ஒருவழிகாட்டியே மார்க்ஸீயம். எந்தத் திசைவழியில் எதிர்காலத்தை நோக்க வேண்டுமென்பதின் வழிகாட்டி. அதை தங்களது தேசம், இடம்,காலம், சூழ்நிலைக்கேற்ப ஒவ்வொரு நாட்டிலுமுள்ள கம்யூனிஸ்டுகள் கையாளுகின்றனர். இதுபண்டித நேருவிற்குத்தெரியும். என்றாலும் கம்யூனிஸ்ட்களைப்பற்றி நேரு ஜகஜாலப் புரட்டு பிரசாரத்தில் இறங்கியிருப்பதின் காரணம் அவரது இன்றைய சூழ்நிலை தான்.

### தி. மு. க.வும் பர்மிய நிலச்சீர்திருத்தமும்

சி. சௌந்திரபாண்டியன் மதுரை.

**கேள்வி:**

பர்மாவில் ஏராளமான நிலத்தை வைத்திருந்த தென்னாட்டு திராவிடர்களுக்கு பர்மிய சர்க்காரிடமிருந்து போதிய நஷ்டஈட்டை நேரு சர்க்கார் வாங்கித் தரவேண்டுமென்று 'நம் நாடு' பத்திரிகை எழுதுகிறதே! அவ்விதமாயின் இந்திய நாட்டில் நிலப்பிரபுக்களின் சொத்தை நஷ்டஈடின்றி எடுத்து விவசாயிகளுக்கு இலவசமாக வினியோகம் செய்ய வேண்டும், என்ற கொள்கையை அங்கீகரிக்குமா?

**பதில்:** இன்றைய போக்கில் அவர்கள் அங்கீகரிப்பார்கள் என்று தெரியவில்லை. பர்மிய விவசாயிகளுக்கு நிலச்சீர்திருத்தம் செய்வதை அனுதாப கண்ணுடன் பார்க்க 'நம்நாடு' மறுப்பதின் காரணம் அந்த நாட்டை சுரண்டி கொழுத்த குபேரர்களான ஒரு சில சோம்பேறி 'திராவிடர்'களின் மேல் ஏற்பட்ட காதல்தான். அந்த 'திராவிட' நிலப்பிரபுக்களுக்காக சோகக் கண்ணீர் வடிக்க வரும் தி. மு. க. ஏடு, நம் நாட்டில்,—அவர்கள் கூறும் திராவிடத்தில்—நிலப்பிரபுக்களின் நிலத்தை நஷ்டஈடின்றி எடுத்து விவசாயிகளுக்கு பகிர்ந்து கொடுப்பதை எங்ஙனம் ஆதரிக்க ஆவல் கொள்ளும்?

### திரு-தமிழகப் போராட்டம்

டி. எஸ். வீரபெருமாள்—குடந்தை.

**கேள்வி:** திரு-கொச்சியில் நடக்கும் ஐக்கிய தமிழகத்திற்கான போராட்டத்தை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?

**பதில்:** ஆம். அங்கு நடக்கும் போராட்டத்தில் கம்யூனிஸ்ட் கட்சியும் பங்குகொள்ளுகிறது. அங்குஇன்று ஆரம்பமாகியிருக்கும் ஐக்கிய தமிழகத்திற்கான போராட்டத்தில் லட்சோப லட்சக் கணக்கில் மக்களை திரு—தமிழகத்திலும்,தமிழ் நாட்டிலும் திரட்டவும், ஐக்கிய கேரளம் கோரும் கேரள மக்களையும் ஆதரவாக திரட்டவும் கம்யூனிஸ்ட் கட்சி இன்று முயன்று வருகிறது. இதற்காக ஜனநாயகவாதிகளை ஒன்று திரட்டவும் முயன்று வருகிறது. சென்ற வார ஜனசக்தியில் இது பற்றிய கட்சி அறிக்கையும் வெளியாகி இருக்கிறது.—கே. எம்.

# மதுரை நகர் பெண்கள் 2-வது மகாநாடு

"தாதர் என்ற நிலைமைமாறி ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வமிந்த நாட்டிலே"

என்ற பாரதியின் பெண்ணுரிமை கீதம் இன்னிசை முழங்க, மதுரை நகர் பெண்கள் சங்கத்தின் 2-வது மகாநாடு புட்டுத்தோப்பு மைதானத்தில் நிறுவப்பட்டிருந்த அலங்காரப் பந்தலில் பாராளு மன்ற உறுப்பினர் திருமதி பார்வதி கிருஷ்ணன் அவர்கள் தலைமையில் 18-7-54ல் காலை 11 மணிக்கு ஆரம்பமாயிற்று.

மாதர் சங்கத்தின் நீல கிறக் கொடியை மன்னார்குடி மாதர் சங்கத் தலைவர் திருமதி மீனாக்ஷி சுந்தரம்மாள் அவர்கள் பலத்த ஆரவாரத்திடையே ஏற்றுவித்தார்.

பெண்கள் மகாநாட்டில் 500க்கு மேற்பட்ட பெண்கள் உற்சாகமுடன் கலந்து கொண்டார்கள். எங்கு நோக்கினும் பெண்ணுரிமை பற்றிய கோஷங்கள் பொறித்த அட்டைகள் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தன.

சங்கத் தலைவர் ஸ்ரீமதி சுப்புலக்ஷிமி அம்மாள் அவர்கள் அனைவரையும் வரவேற்றுப் பேசினார்கள். சமூக, அரசியல், பொருளாதாரத் துறைகளில் பெண்கள் முன்னேறுவதற்குப் பெண்கள் சங்கத்தில் சேர்ந்து பாடுபட வேண்டுமென்று மகாநாட்டுத் திறப்பாளர் திருமதி பொற்செல்வி இளமுருகு அவர்கள் பேசினார்கள்.

சங்க காரியதரிசி திருமதி கே. பி. ஜானகியம்மாள் அவர்கள் ஆண்டறிக்கை வாசித்தார்.

### பார்வதி கிருஷ்ணன்

மகாநாட்டுத் தலைவர், பார்வதி கிருஷ்ணன் எம். பி. பேசுகையில், சர்வதேச பெண்கள் இயக்க வரலாறு குறித்து விளக்கமாகப் பேசினார்.

"சம வேலைக்கு சம சம்பளம், 14 வயதுக்கு உட்பட்ட அனைவருக்கும் இலவசக் கல்வி, பிரசவ ஆஸ்பத்திரிகள்," ஆகிய கோரிக்கைகளுக்காக கிளர்ச்சி செய்யவேண்டும். பெண்களின் கோரிக்கைகள் ஆண்களுக்கு விரோதமானவையல்ல" என்றும் திருமதி பார்வதி அவர்கள் கூறி, பார்லிமெண்டில் விவாதத்திற்கு வந்த விசேஷ விவாக மசோதாவை விளக்கினார்.

பிற்பகலில் பெண்களின் கோரிக்கைகளடங்கிய தீர்மானங்களின்மீது நாகப்பட்டணம் மாதர் சங்கப் பிரதிநிதி திருமதி பட்டம்மாள், மன்னார்குடி பிரதிநிதி மீனாக்ஷி சுந்தரம்மாள், பொதும்பு ஸ்ரீமதி ராமாயம்மாள், திருமதி ராஜம்மாள் ஆகியோர் பேசிய பின், தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறின.

### ஊர்வலம்

மாலையில் நடைபெற்ற மாபெரும் ஊர்வலத்தில் விவசாயப் பெண்களும் பஞ்சாலைப் பெண்களும் நூற்றுக் கணக்கில் கலந்து கொண்டார்கள். வேலையில்லாப் பெண்களுக்கு வேலை வேண்டும்! சமவேலைக்கு சம சம்பளம் வேண்டும்! உலக சமாதானம் வேண்டும்! என்ற கோஷங்களை முழங்கிக் கொண்டு சென்றார்கள்.

### பொதுக்கூட்டம்

மாலை 7 மணிக்கு திலகர் திடலில் நடைபெற்ற பொதுக் கூட்டத்துக்கு 1,000 பெண்கள் உட்பட 7,000 பொதுமக்கள் வந்திருந்தார்கள். திருமதி ராஜம்மாள் அவர்கள் தலைமை வகித்தார்.

மகாநாட்டு முடிவுகளை விளக்கி திருமதி மீனாக்ஷி சுந்தரம்மாள் சொற்பொழிவாற்றினார். மக்கள் சபையில் வந்த விசேஷ திருமண மசோதா" பற்றி திருமதி. பார்வதி கிருஷ்ணன் பேசினார்.

திருமதி கே. பி. ஜானகியம்மாள் நன்றிகூற, கூட்டம் இனிது முடிவுற்றது.

# போராடும் பாலார் மில் தொழிலாளிகளுக்கு
## பொருளுதவி புரியுங்கள்

செங்கல்பட்டு ஜில்லா வாலாஜாபாத்திலுள்ள பாலார் மில் 1950 முதல் நூல் உற்பத்தி செய்து வருகிறது. சுமார் 13,000 கதிர்களுள்ள இந்த மில்லில் 320 தொழிலாளி வேலை செய்கிறார்கள். இந்த தொழிலாளிகளில் 50 சதமானவர்கள் இரண்டு மூன்று வருடம் தொடர்ந்த ஸர்வீஸ் உடையவர் என்றாலும் இன்னும் நிரந்தரமாக்கப்படாமல் இருக்கின்றனர். வெங்கட்டராமய்யா தீர்ப்புப்படி இவர்களுக்கு சம்பளமில்லை. ஐம்பது சதவீதமானவர்களுக்கு அணா 12, 14ம் தான் தினக்கூலி, ரீலிங் தொழிலாளிகளுக்கு மாதம் 26 நாட்களும் வேலைசெய்தால் மொத்தம் ரூ. 44-0-0 தான் மாதச் சம்பளம் கிடைக்கிறது. பஞ்சப்படி கிடையாது. 100 ரீலிங் தொழிலாளிகளின் நிலைமை இது. சட்டப்படி விடுமுறை வசதியோ, வைத்திய வசதியோ கிடையாது. சட்ட விரோதமாக தினம் ஒன்றுக்கு 9, 10 மணி நேரம்கூட சில தொழிலாளிகளிடம் வேலை வாங்கப்பட்டுள்ளது.

இந்த நிலைமையில் ஒரு மாற்றம் காணவும், வேலை நிரந்தரம், அடிப்படை சம்பளம் ரூ. 26, பஞ்சப்படி தற்காலிகமாக 0-2-6, குற்றச்சாட்டின்றி, அறிவிப்பின்றி, விசாரணையின்றி சங்க செயலாளருள்பட பழிவாங்கப்பட்ட 8 தொழிலாளிகளுக்கு மீண்டும் வேலை ஆகிய சாதாரண கோரிக்கைகளைப் பெறவும் பொதுமக்கள் ஆதரவுடன் சட்ட ரீதியாகவும் தொழிலாளிகள் 13-6-54 முதல் 23-6-54 முடிய வேலை நிறுத்தம் செய்தனர். தொழிலாளிகளைப் பட்டினிபோட்டு, அவர்களிடையே சீர்குலைவை புண்டுபண்ணி சங்கத்தை உடைக்கும் நோக்கத்துடன் மில் நிர்வாகம் தொழிலாளிகளின் 8 நாள் சம்பளத்தைப் பிடித்தம் செய்துள்ளது. இதை எதிர்த்து சங்கம் நடவடிக்கை எடுத்து வருகிறது. நிர்வாகத்தின் இந்தத் தாக்குதலை முறியடிக்க 320 தொழிலாளிகளும் உறுதி பூண்டுள்ளனர். ஆனால், பொருளாதாரத் துறையில் ஏற்பட்டுள்ள நெருக்கடியிலிருந்து அவர்கள் மீள சகோதரத் தொழிலாளிகளின் உதவியை நாடுகின்றனர். நீடித்த போராட்டத்தின் காரணமாக பொருளாதார நெருக்கடி ஏற்பட்டதால் கஷ்டமானநிலைமை. எனவே தொழிற் சங்க இயக்க வளர்ச்சியில் அக்கரைகொண்ட அனைவரும் பொருளுதவி தந்து ஆதரிக்கக் கோருகிறோம்.

பணம் அனுப்பவேண்டிய முகவரி:

செயலாளர்,
பாலார்மில் தொழிலாளர் சங்கம்,
16, தாசப்ப சுபேதார் தெரு,
வாலாஜாபாத்,
செங்கற்பட்டு ஜில்லா.

# முள்ளிபாளையம் தோல் பதனிடும் தொழிலாளர்கள் வெற்றி

வேலூர் முள்ளிபாளையம் எ. ஹாஜி அப்துல் ஷுக்கூர் அன்ட் கம்பெனி நிர்வாகம் ஏற்கெனவே லாரி முன் மறியல் செய்த காரணத்திற்காக நீக்கியுள்ள 11 பெண்கள் 2 ஆண், 3 சிறுவர்கள் மட்டுமல்லாமல் 13-7-54ல் ஒரு டிபார்ட்மெண்டில் வேலை செய்து வந்த 26 தொழிலாளிகளை கூலி வேலைக்காரர்கள் என்று கூறி நீக்கிவிட்டனர்.

இதை எதிர்த்து தோல் பதனிடும் தொழிலாளிகள் அனைவரும் 14—7—54 உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தனர்.

ஒற்றுமையின் பலத்தைக்கண்ட முதலாளி பணிந்தார். ஜில்லாக் கலெக்டர் முன்னிலையில் நிர்வாகத்திற்கும் தொழிலாளிகளுக்கும் உடன்பாடு ஏற்பட்டது.

1. லேபர் ஆபீசர் விசாரணை நடத்தி முடியும்வரை யாரையும் வேலையைவிட்டு நீக்கக்கூடாது.
2. நீக்கிய அனைவரையும் வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும்.

கலெக்டர் முன்னிலையில் ஒப்புக்கொண்ட போதிலும், நீக்கப்பட்டவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ள முதலாளி சண்டித்தனம் செய்கிறார்.

### ராதாகிருஷ்ணா மோட்டார் தொழிலாளர் வாகை மாலை

பரமக்குடி தலைமைத் தொழிற்சாலையும், காரியாலயமுமாகக் கொண்டுள்ள ராதாகிருஷ்ணா மோட்டார் சர்வீசில் காரணமின்றி நீக்கப்பட்ட கண்டக்டர் டி. ஆர். சாமிக்காக மதுரை தொழிற் கோர்ட்டில் நடத்த வழக்கில் தீர்ப்பு 23-6-54ல் கெஜட்டில் வெளியாகியுள்ளது.

அத்தீர்ப்பில் வேலையிழந்த தொழிலாளியை 30 நாளைக்குள் வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும், அவரது சர்வீசில் ஒருநாள்கூட முறிவு ஏற்படக்கூடாதென்றும், நீக்கப்பட்ட தேதிமுதல் வேலைக்கு சேர்த்துக் கொள்ளும் தேதிவரை மாதம் ரூ. 52 வீதம் சம்பளம் கொடுக்க வேண்டுமென்றும், பழைய பாக்கியையும் கொடுத்துவிடவேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளது. தொழிலாளிகளின் சார்பில் சங்கக் காரியதரிசி தோழர் கே. எம். சுந்தரம் வாதாடினார்.

### எஞ்சினீரிங் மெக்கானிகல் தொழிலாளர் மகாநாடு

கோவை ஜில்லா ஜெனரல் எஞ்சினீரிங், மெக்கானிகல் தொழிலாளர் சங்க வருடாந்திர மகாசபைக் கூட்டம் பாப்பநாயக்கன் பாளையத்தில் சங்கத் தலைவர், ஜி. கஸ்தூரிசாமி தலைமையில் நடைபெற்றது.

புதிய ஆண்டிற்கு ஆர். மாரியப்பன் தலைவராகவும், ஏ. கே. வெங்கடேஸ் செயலாளராகவும், பி. சின்னச்சாமி பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

டெக்ஸ்டைல் கம்பெனி நிர்வாகத்தால் பழிவாங்கப்பட்டுள்ள 6 தொழிலாளிகள் பிரச்னையை அட்ஜூடிகேஷனுக்கு விடவும், தொழில் முழுதுமுள்ள டெம்பரரி முறையை ரத்து செய்யக் கோரியும், சிறு என்ஜினீரிங் முக்கூட்டுக் விசாரணைக் கமிட்டியின் அறிக்கையை உடனே பிரசுரிக்க வேண்டுமென்றும், அரசியல் கைதிகள் விடுதலை கோரியும் தீர்மானங்கள் நிறைவேறின.

# மாதர் பகுதி

# தமிழ்நாடு விவசாயிகள் சங்க 6-வது மகாநாடு
## திண்டுக்கல்

இம்மாதம் 30, 31 ஆகஸ்டுமீ 1-ந்தேதிகளில் நமது 6-வது மகாநாடு மதுரை ஜில்லா திண்டுக்கல்லில் நடைபெறும்.

மகாநாட்டை யொட்டி, மகாநாட்டிற்கு தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் கூட்டம் ஜூலை 30 காலை 9-மணிக்கு தாடிக்கொம்பு தெருவிலுள்ள பாலுச்சாமி ஐயர் சத்திரத்தில் நடைபெறும். ஆகையால் நீங்கள் தவறாமல் 29-ந் தேதி மாலை அல்லது 30-ந் தேதி காலை திண்டுக்கல் வந்து சேர வேண்டுமாய் கேட்டுக்கொள்கிறோம்.

### அஜண்டா

1. மகாநாட்டுத் தலைவர் தேர்தல்.
2. த. நா. வி. சங்கத்தின் நகல் சட்டதிட்டம் காரியதரிசியால் பிரேரேபிக்கப்படும்.
3. காரியதரிசியின் ஆண்டு அறிக்கை.
4. வரவு செலவு கணக்கு.
5. தீர்மானங்கள்.

| | |
|---|---|
| 30—7—54 | காலை 9 மணி முதல் 12 மணி வரை |
| ,, | மாலை 2 மணி முதல் 6 மணி வரை |
| 31—7—54 | காலை 9 மணி முதல் 12 மணி வரை |
| ,, | மாலை 2 மணி முதல் 6 மணி வரை |
| 1—8—54 | காலை 9 மணி முதல் 12 மணி வரை |
| ,, | மாலை ஊர்வலமும் பொதுக்கூட்டமும். |

மகாநாட்டில் அகில இந்திய விவசாயிகள் சங்கப் பொதுச் செயலாளர் தோழர் நந்தூரி பிரசாதராவ் கலந்துகொள்வார்

பி. சீனிவாச ராவ்,
பொதுக்காரியதரிசி,
தமிழ்நாடு விவசாயிகள் சங்கம்.

# மதுரை நகரசுத்தி தொழிலாளர் கண்டன வேலைநிறுத்தம்

மதுரை நகரசுத்தி தொழிலாளர் சங்க செயலாளரும் த.நா. தொ. சங்க காங்கிரஸ் கமிட்டி உறுப்பினருமான தோழர் எஸ் பி. ஆண்டியும், சங்க துணைச் செயலாளரும், தொ. ச. ஊழியர்களுமான தோழர்கள் மருதவீரன், பிளாவடியும் 6 மாத சிறைதண்டனை விதிக்கப்பட்டுள்ளனர்.

தங்களது தலைவர்களுக்கு இழைக்கப்பட்ட தீர்ப்பைக் கண்டித்து ஜூன் 27ந் தேதி காலை நகரசுத்தித் தொழிலாளிகள் அனைவரும் 1-மணி நேர வேலைநிறுத்தமும், மாலையில் ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடத்தி தங்கள் கண்டனத்தைத் தெரிவித்தார்கள். உடனடியாக மேற்கண்ட தோழர்களை நிபந்தனையின்றி விடுதலை செய்ய வேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### மேட்டுப்பாளையம் கண்ணாடி கம்பெனி முதலாளி பணிகிறார்

இங்குள்ள இந்தியா செலிகேட் இண்டஸ்டரீஸ் என்னும் கண்ணாடி கம்பெனியை நிர்வாகம் 10-7-54ல் மூடி விட்டது. ஆனால் தொழிலாளிகளுக்குக் கொடுக்க வேண்டிய சம்பளம், நஷ்ட ஈடு கிராஜூடி முதலானதை நிர்வாகம் கொடுக்கவில்லை.

இதை எதிர்த்து அன்றைய தினமே 60 பெண் தொழிலாளிகள் உள்ளிருப்பு போராட்டம் நடத்தினர். இதைக் கண்டு மிரண்ட நிர்வாகம் தொழிற் சங்கத்துடன் சமரசம் பேச முன்வந்தது. தொழிலாளிகளுக்கு ஒரு பகுதி தொகையை உடனே கொடுப்பதென்றும் பாக்கியை 30-7-54 கொடுப்பதாகவும் முதலாளி ஒப்புக்கொண்டார்.

### பங்களூரில் மில் தொழிலாளர் அவதி

பங்களூரிலுள்ள மைசூர், மினர்வா மில் தொழிலாளர் 8000 பேர்களின் போனஸ், அடிப்படைச் சம்பளம், பஞ்சப்படி பிரச்னைகளைப் பற்றி பரிசீலனை செய்வதற்காக 3 வருடத்திற்கு முன்பு தொழில் கோர்ட் நியமிக்கப்பட்டது. ஒரு வருடம் பரிசீலனை நடைபெற்றது. பரிசீலனை முடியும் தருவாயில் முதலாளிகள் தொழில் நீதிமன்ற அமைப்பு பற்றி சில ஆட்சேபணைகளைக் கிளப்பி, சுப்ரீம் கோர்ட் வரை வழக்காடினர். இதன்மூலம் 2 வருடம் இழுத்தடித்தனர்.

சுப்ரீம் கோர்ட்டிலும் முதலாளிக்கு வெற்றி கிடைக்கவில்லை. இந்த நிலைமையில் நடக்கவேண்டியது என்ன? ராமலிங்கய்யா டிரிபுனல் தன்னுடைய பரிசீலனையை தொடர்ந்து நடத்தி தீர்ப்பை சீக்கிரம் வெளியிட வேண்டியதுதானே. ஆனால் மைசூர் சர்க்கார் இதைச் செய்யாமல் இப்போது முதலாளிகளின் வேண்டுகோளுக்கிணங்க புதிய டிரிபுனலை நியமித்துள்ளனர். தொழிலாளிகளின் ஆட்சேபணைகளை சற்றும் பொருட்படுத்தவில்லை. புதிய டிரிபுனல் எப்போது பரிசீலனையை ஆரம்பிக்கும், அவர்கள் எப்போது முடிப்பார்கள் என்பது யாருக்கும் தெரியாது. தொழிலாளிகளுக்கு 10 அணா 8 அணா என்று கூலி கொடுத்து தங்கள் தொந்தி தொப்பைகளை நிரப்பும் முதலாளிகள் மீண்டும் சட்ட ஆட்சேபணைகளை கிளப்பி பல வருடங்கள் காலங் கடத்த வசதி செய்துள்ளது காங்கிரஸ் அரசாங்கம். முதலாளி—காங்கிரஸ் சர்க்கார் கூட்டுச்சதியை முறியடிக்க பங்களூர் மில் தொழிலாளிகள் கட்சி வித்தியாசமின்றி ஒன்றுபட்டு வருகிறார்கள்.

# காங்கிரஸின் சிறைக் கூடம்

## கொடுமையே அறமாகிவிட்ட கோரம்

### திருச்சி சிறையிலே கைதிகள்படும் அவதி

"சிறை யென்பது தண்டனைக்காகவல்ல, சீர்திருந்துவதற்காகவே; உங்களுக்குக் கொடுக்கப்படும் உணவு, வெளியில் சாதாரண மனிதனுக்குக் கிடைக்கும் உணவைக் காட்டிலும் அதிக சத்துள்ளது. அதை யாருக்கும் பகிர்ந்து கொடுக்காதே, உடல் நலம் கெட்டுவிடும்; வியாதியினால் அவஸ்தைப் படுகிறாயா? என்ன வியாதி? டாக்டர் இருக்கிறார் அவரிடம் சொல், கவனித்துப் பார்ப்பார்; உனக்கு என்ன வேலை தெரியும்? தச்சுவேலையா? நெசவு வேலையா?...... ஜெயிலரிடம் சொல்லு, தகுந்த வேலையளிப்பார் படிக்க விரும்புகிறாயா? பள்ளிக்கூடம் இருக்கிறது நன்றாகப்படி" என்று எழுத்தாழ இதே வார்த்தைகளில் கைதிகள் படித்தறிந்து கொள்ளுவதற்காக வென அவுட்குவாரண்டைன் சுவர்களில் தெளிவாகத் தீட்டப்பட்டிருக்கிறது வார்த்தைகள் அருமைதான். ஆனால் இவை பக்கா பகட்டுவேஷம் என்பதைக் கீழ்வரும் தகவல்கள் விளக்கும். சிறைகளைப் பார்க்க வருபவர்கள் மேலே கண்டுள்ளவைகளைப் படித்துப்பார்த்துவிட்டு, "ஆகா, காங்கிரஸ் ஆட்சியில் இவ்வளவு அருமையாகவா சிறை நடத்தப்படுகிறது!" என்று நினைத்துக்கொண்டு போகவேண்டும் என்ற கருத்துடன் எழுதிவைக்கப்பட்டிருப்பதைத் தவிர வேறெதற்காகத்தான் இருக்க முடியும் இது?

#### பச்சைபுளுகுகள்

பள்ளியென்று அங்கு ஒன்று உண்டு. அதைப் பெயருக்கு வைத்துக்கொண்டு 80 சதவிகித கைதிகள் சிறையில் படித்துக் கற்றுக்கொண்டு திரும்புவதாக பச்சைப் புளுகுகள் பத்திரிகைகள் மூலம் மந்திரிகளால் வீசப்படுகிறது. என் கண்ணால் பார்த்தது தினம் பத்துப் பனிரண்டு பேர்கள் பள்ளிக்குச் செல்லுவதைத்தான், பொய்யாக, பள்ளிக்கு அதிகம் பேர்கள் வந்து போவதாக எழுதிக்கொள்ளுகிறார்கள். ஓய்வொழிச்சலில்லாது கடுமையான வேலை வாங்குவதிலே கவனம் செலுத்திக் கொண்டிருப்பவர்கள் படிப்பதற்கு எப்படி விடுவார்கள்? உணவு அருந்தியவுடன் வேலைக்குச்சென்றுவிடவேண்டும். நெல் குத்துபவர்களைப் படுத்தும் பாடு எவ்வளவு கொடூரமானது என்பதை அங்கு சென்று திரும்பியவன் சாகுமளவும் மறக்கமாட்டான். அவுட்கேங்கில் ஒரு நாளாவது அடிபடாத ஒரு ஆள்கூட இருக்கமுடியாது. ஒரு விவசாயி (காளி) தாக்கப்பட்டது சம்பந்தமாக சிறை அதிகாரியிடம் ரிப்போர்ட் செய்தார். அது காற்றுவாக்கில் போய்விட்டது சாமிநாத படையாச்சி என்ற ஒரு கைதி 'பைலில்' முறையிட வேண்டும் என்று பேசிக்கொண்டிருந்ததற்காக லட்டியால் தாக்கப்பட்டு காலில் ரத்தம் பீறிட்டோடியது. கேள்வி முறையில்லை. முறையிட்டால்தான் மீண்டும் நொறுக்குவார்களே என்று கம்மென்று இருந்துவிட்டார் அவர். சுருங்கக் கூறினால், ஒருநாளை ஒரு வருஷமாக சதா நடுங்கிக்கொண்டே கழித்து வரவேண்டிய நிலை.

#### நினைத்தால் வாந்தி வரும்

சுகாதாரம் வியாதியாதாரம் தான். மேலதிகாரிகள் விஜயம் செய்து பார்க்கும்போது மட்டிலும், வெள்ளையடித்து வெளிச்சம் போட்டு வைத்து விடுகிறார்கள். உணவு தயாரிக்கும் இடத்தையும், முறையையும், அந்த உணவில் கிடக்கும் பொருட்களையும் நினைத்தாலே வாந்திவரும் வேறு வழியின்றி அந்நிலையில் அவ்வுணவை உண்ணவேண்டிய நிர்ப்பந்தம் உண்ணுகிறார்கள். துணிகளை வெளுப்பதற்காகக் கொடுபட வேண்டிய சோடா உப்பும், இதர சாமான்களும் எங்குதான் மாயமாய் மறைகின்றனவோ! பெயரளவுக்குக் கைதிகளுக்குக் கொஞ்சம் கிடைக்கிறது. அது உடையிலுள்ள அழுக்கில் பூசவே போதாக்குறை. இந்நிலையில் நாற்றமெடுக்கும் உடைகளை உடுத்தாது என்ன செய்வார்கள்? சிறைக்கு வெளியில் வேலை செய்வதற்கு வரும் கைதிகளைப் பார்த்தாலே இந்த லட்சணம் விளங்கும். பிளாக்குகளிலுள்ள மூட்டைப் பூச்சிகள் மனிதனின் ரத்தத்தை அவுன்ஸ் அவுன்ஸாகக் கொண்டு போகிறது. டி. டி. டி. பௌடர் சப்ளை உண்டு. ஆனால் இதுவும் மாயமாய் மறைந்துவிடும். குடி தண்ணீர் போதுமான அளவு சரியான முறையில் சப்ளை செய்யப்படுகிற தில்லை. குளிக்கும் இடமும் அப்படியே. ஒரு ஆள் குடிக்கவேண்டிய இடத்தில் 9 பேர்கள் புகுந்துகொண்டு ஒருவரையொருவர் இடித்துத் தள்ளிக்கொண்டே உடம்பு நனைந்ததும் நனையாததுமாக தண்ணீரை ஊற்றிக்கொண்டு வெளியேறிவிட வேண்டும். க்ஷவரம் செய்து கொள்ள புதுக்கத்திகள் அளிக்கப்பட்டிருக்கின்றன.

ஆனால், கைதிகளின் முகத்தில் சாதாரண இரும்பாலடித்த தகடுதான் போட்டு கொடும் வேதனையுடன் வாண்டப்படுகிறது. இன்னும் கணக்கிலடங்காத் தொல்லைகளை சாதாரண கைதிகளும், அரசியல் கைதிகளும் தினே தினே அனுபவித்து செத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கூறினால் அது சிறிதும் மிகையாகாது. மொத்தமாகக் கூறுங்கால், கைதிகளுக்குக் கொடுபட வேண்டிய உணவுப் பொருட்களும், சர்க்காரின் சொத்துக்களாகிய மரம், துணி முதலியவைகளும் கூட்டுக்கொள்ளையிடப்படுகிறது. சமீபத்தில் சுமார் நூறு புது தட்டுக் குவளைகளை டிபுடி ஜெயிலர் தன் வீட்டுக்கு அடித்துக்கொண்டு போய் விட்டார் என்று தெரிகிறது. இவர்தான் கைதிகளின் சொத்துக்களை முழுமூச்சாக அபகரித்துப் பொருள் சேர்த்து வைத்திருப்பவர் என்று சொல்லப்படுகிறது. கணக்கு வேறு; நடப்பு வேறு, கணக்குகள் காண்பிப்பதில் நிபுணர்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால், ஒய்யாரக்கொண்டையாம், தாழம்பூவாம், உள்ளேயிருக்குமாம் ஈரும் பேனும் என்கிற கதைதான்.

#### வேலியே பயிரை மேய்கிறது!

சிறையில் இப்பெருங் கொள்ளையும், மூடிமறைக்கும் திறனும், தங்களைச் சீர்திருத்துவதற்காக வென்று அமர்த்தப்பட்டுள்ள அதிகாரிகளால் கையாளப்படுவதை நேரில் பார்த்துக்கொண்டிருக்கும் கைதிகள் அதற்கு உடந்தையாகவும் உள்ள கைதிகள்—சீர்திருந்த ஏதேனும் வழியிருக்கிறதாவென்பதை சொல்லாமலே புரிந்து கொள்ளலாம். மேற்படி கொள்ளையில் சில கைதிகளுக்குக் கணிசமான அளவு பங்கும் கிடைக்கிறது அதிகாரிகளின் பக்கம் சாக்ஷிகளுக்கு ஆள் வேண்டுமல்லவா? இதற்காகவென்றே என்னவோ ஒருபகுதி கைதிகளைத் திருப்திப்படுத்தித் தங்கள் பக்கம் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் அதிகாரிகள். இவர்கள் சாக்ஷிகளுக்கும் வருவர். நியாயத்தைக் கோரும் கைதிகளை உதைக்கவும் வருவர். எல்லாவற்றிற்கும் மேலாக இந்தத் திமிர்பிடித்தவர்களால் அங்குள்ள சிறு பையன்கள் தீய வழிகளில் கெடுக்கப்படுகிறார்கள். இவ்வழியில் ஈடுபடாது திரும்பும் பையன்கள் நூற்றுக்கு பத்து பேர்கள்கூட இருக்கமாட்டார்கள். விசேஷ கவனத்துக்குரிய விஷயமாகுமிது.

இந்த தர்பார் பலகாலமாக திருச்சி மத்திய சிறையில் நடைபெற்று வருவதைப் பல மாஜிக் கைதிகள் புகார் செய்தும், சர்க்கார், ஏதும் அறியாதிருப்பவர்கள் போலிருப்பது ஏனோ? பாதிக்கப்படுபவர்களில் சாதாரண திருடனும் ஒன்றுதான், குடித்தவனும் ஒன்றுதான், மக்களின் சார்பில் போராடிச் செல்லும் அரசியல் வாதியும் ஒன்றுதான். நாளை நாமும் சிறைக்குப் போக நேரிடலாம்; இக் கொடுங்காவல் தண்டனையை அனுபவிக்க நேரிடலாம், ஆயிரக்கணக்கானவர்கள் இத் தொல்லைகளுக்கு ஆளாகியிருக்கிறார்கள் என்பதைக் கருத்தில் கொண்டு இவ்வக்கிரமம் ஒழியப் பொதுமக்கள், சர்க்காரை வற்புறுத்துவார்களாக! நேர்மையான விசாரணை சர்க்காரால் நடத்தப்படுமானால், போதிய சாட்சியங்களுடன் நிரூபிக்கமுடியும்.

—எஸ்.வி. கோவிந்தராஜன்

## அனைவரையும் ஓரணியில் திரட்ட

### மில் தொழிலாளர் மகாநாட்டின் அறைகூவல்

கோவை மில் தொழிலாளர் சங்கத்தின் 14-வது பொது குழுக்கூட்டம் 4-7-54-ல் சங்கத் தலைவர் தோழர் எம். பூபதி தலைமையில் நடைபெற்றது.

புதிய ஆண்டிற்கு எம். பூபதி தலைவராகவும், டி. ஆறுமுகம் முதலியார், ரங்கநாதன், ஆர். ராஜகோபால், கண்ணன் ஆகியவர்கள் உபதலைவர்களாகவும், கே. என். சின்னய்யன் பொதுச் செயலாளராகவும், ஆர். கே. பாண்டுரங்கம், கே. எஸ். வாசுதேவன், எஸ். என். காளியண்ணன், ஆர். வெங்கட்டசாமி, என். கண்ணுகுட்டி துணைச் செயலாளர்களாகவும், ஆர். நஞ்சப்பன் பொருளாளராகவும், ன்.கே. கிருஷ்ணன் விளம்பர அதிகாரியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

#### தீர்மானங்கள்

1. 1948-ம் வருடத்திய தொழில் தகராறு திருத்தச் சட்டப்படி கோ-ஓர்க் சாட்களுக்குப் பாதிச் சம்பளமும், பாதி பஞ்சப் படியும் நஷ்டஈடாக கொடுக்கும்படி முதலாளிகளை சர்க்கார் நிர்ப்பந்திக்க வேண்டும்.

2. 20 நாட்களுக்கு 1 நாள் வீதம் சகல தொழிலாளிகளுக்கும் ஓய்வு விடுமுறை அளிக்கவேண்டும்.

3. மில் முதலாளிகள் தொழிற் சங்கங்களை அங்கீகாரம் செய்ய வேண்டும்.

4. 6 மாதத்திற்கு மேல் வேலை செய்து வந்துள்ள சகல தொழிலாளிகளையும் நிரந்தரமாக்க வேண்டும்.

5. மின்சார வெட்டுக்காலத்திற்கு நஷ்டஈடு அளிக்கப்பட வேண்டும் என்னும் தீர்ப்பு உடன் அமுலாக்கப்பட வேண்டும்.

6. இன்று எல்லா மில்களிலும் ஆள் போதாத நிலைமையிருப்பதால் தொழிலாளர் இயக்கத்தில் பங்கெடுத்தற்காகவும், முதலாளிகளின் லாபவேட்டை காரணமாகவும் நீக்கப்பட்ட பல்லாயிரக் கணக்கான தொழிலாளிகளுக்கு மீண்டும் வேலை கொடுக்கவேண்டும்.

7. புறம்போக்கு நிலங்களில் மட்டச் சாவைகள் போட்டு குடியிருக்கும் தொழிலாளிகளை காலி செய்யக் கூடாது எனக் கோருவதுடன் மாதாமாதம் ஒரு குறிப்பிட்ட தொகையை செலுத்தி இடத்தை விலைக்கு வாங்குவதற்கு வசதி அளிக்கவேண்டும்.

8. 1949—51 வருட போனஸ் சம்பந்தமாக 2 வருடமாக போடப்பட்டுள்ள 'ஸ்டே ஆர்டரை' ரத்து செய்து சகல வழக்குகளும், விசாரணைகளும் நடைபெற சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டும்.

#### தொழிற் சங்க ஒற்றுமை

9. கோவை மில் முதலாளிகளின் தாக்குதல்களையும் சர்க்காரின் முதலாளி ஆதரவு போக்கையும் எதிர்த்து தொழிற் சங்க ஒற்றுமையில்லாத நிலைமையில் தொழிலாளிகள் கஷ்டமான நீடித்த போராட்டங்களை ஒன்றுபட்டு மேற்கொண்டு வருகின்றனர். என்பதை இம்மகா சபைக் கூட்டம் கணக்கிலெடுத்துக்கொள்கிறது. தற்போது மூக்கூட்டு கமிட்டி சிபார்சை அமுல் நடத்துவது, 1948-ம் வருட ஆட்குறைப்பு, நஷ்டஈடு பெறுவது, 1952-வது வருட போனஸ், மின்சாரவெட்டு நஷ்டஈடு ஆகிய பிரதான பிரச்னைகள் தொழிலாளிகளின் முன்னிலையில் நிற்கின்றன.

இப்பிரச்னைகளின் வெற்றிக்காகவும் மில் முதலாளிகளின் பிடிவாதப் போக்கை மாற்றவும், கோவையில் உள்ள மூன்று தொழிற் சங்கங்களும் ஒரு கூட்டுக் கமிட்டி அமைத்து முயற்சி எடுத்தால் சாத்தியமே என இம் மகாசபை தனது கருத்தை ஊர்ஜிதம் செய்கிறது. இன்று இப்பிரச்னைகளில் உடனடியாக தீர்வு காண்பது என்பது அவசர அவசியமாகி விட்டது. எனவே மில் தொழிலாளிகளிடையே பணியாற்றி வரும் மூன்று தொழிற் சங்கங்களின் தலைவர்கள், பொதுச் செயலாளர்கள், கூடி இப்பிரச்னை மீது ஒன்றுபட்ட கொள்கையை கடைப் பிடிக்கவும், ஒன்றுபட்ட முறையில் முதலாளிகளையும், சர்க்காரையும் அணுகவும், பிரச்னைகள் தீர்க்கப்படவில்லையென்றால் ஒன்றுபட்டநடவடிக்கையை மேற்கொள்ள வேண்டும் எனவும் இம் மகாசபைக் கூட்டம் கருதுகிறது.

இந்தத் துறையில் பணியாற்ற கோவை ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கமும் முன்வர வேண்டுமென இம்மகா சபைக் கூட்டம் கேட்டுக்கொள்கிறது. இதற்காக சகோதர சங்கங்களுடன் பேச்சு வார்த்தை நடத்தவும் இதர தக்க நடவடிக்கைகள் எடுக்கவும் நமது சங்கத் தலைவர் பொதுக் காரியதரிசிக்கு இம்மகா சபைக் கூட்டம் அதிகாரம் அளிக்கிறது.

மூக்கூட்டுக் கமிட்டியின் வேலைபளு திட்டத்தைத் தவிர இதர சிபார்சுகளை குறிப்பாக அடிப்படை சம்பளம் ரூ 30 என்று பஞ்சப்படி புள்ளிக்கு 0-3-3 வீதம் கொடுக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

## தோழர் ஏ. பாலசுப்ரமண்யத்துக்கு பாஸ்போர்ட் மறுக்கப்பட்டது

தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டி உறுப்பினரும், மதுரை பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத் தலைவரும், திண்டுக்கல் தோல் பதனிடும் தொழிலாளர் சங்கத் தலைவருமான தோழர் ஏ. பாலசுப்ரமண்யம் அவர்களை, போலந்து தேசத்தின் தலைநகராகிய வார்சாவில் சென்ற ஜூன் மாதம் நடக்கவிருந்த சர்வதேச தோல், கம்பளித் தொழிலாளர் சம்மேளன மகாநாட்டுக்கு அனுப்பவேண்டுமென்று அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் தீர்மானித்தது. அதற்கிணங்க பிரயாண அனுமதி வேண்டுமென்று சென்னை சர்க்காரிடம் தோழர் ஏ. பாலசுப்ரமண்யம் கோரியிருந்தார்.

29-3-54ல் அனுப்பப்பட்ட மனுவை எவ்வித காரணமும் காட்டாமல் நிராகரித்து, மகாநாடு முடிந்ததற்குப் பின் 8-7-54ல் பதில் அனுப்பியிருக்கிறார்கள்.

சாதாரண பிரஜாவுரிமைகளைப் பறிக்கும் சர்க்காரின் இப்பிற்போக்கான கொள்கையை தமிழ்மக்களனைவரும் வன்மையாகக் கண்டிக்கவேண்டும்.

## நம்பாதீங்க! நம்பாதீங்க!!

('பலேஜோர் பலஜோர் பட்டண வாசம்' என்ற மெட்டு)

1. காமராச ராட்சிஇன்று கண்டிடலாச்சே;
காணும்பலனை 'ஒருசிலபேர்' விட்டிடலாச்சே!
காமராசர் வாழ்கவென ஓலமிடுகிறார்;
கன்னித்தமிழன் எனக்கதறி வாழ்த்துக்கூறுறார்!

2. காமராசர் வந்துமினி கவலை நீங்க(வில்)லை;
நெசவுஉழவு தொழில்நலிவு ஒன்றும்மாற(வில்)லை!
நமதுசர்க்கார் நமதுநாடு என்றுபுகழுறார்,
நாளும்பசியால் மக்களெலாம் மடிந்துவீழ்கிறார்!

3. உழவுக்காரர் நிலத்தைவிட்டு ஓட்டம்பிடிக்கவே
உழைத்துஉருட்ட போலீஸ்படை அனுப்பிவருகிறார்;
ஐந்துஆண்டு திட்டமென்று கதைகதைக்கிறார்;
அடுக்கடுக்காய் வரிச்சுமையை மேலும்சுமத்துறார்!

4 வீருமென'நில சீர்திருத்த'க் காடிவிடுகிறார்;
வம்புக்கிழுக்க வழிமுறைகளை வகுத்துநிற்கிறார்;
பணத்தின் குன்றிலேறிக்கொண்டு பரிவுபேசுறார்;
குணத்தைவிடுத்து கோலாகல ஆட்சிபுரிகின்றார்!

5 தொகுதிகுடி யாத்தத்திலே அமைச்சர்நிற்கிறார்;
தொடரும்ஜன நாயகத்தை எதிர்க்கப்பார்க்கிறார்!
நம்பாதீங்க நம்பாதீங்க ஆகஸ்ட்ஒன்னிலே;
நம்பிஓட்டு போடாதீங்க மாட்டுப்பெட்டியிலே!

கோவை - கவிஞர் - சி. பி. கந்தசாமி

# ஆசியாவிலிருந்து அமெ

# சுதந்திரத் திருவிளக்கு சுடர்விட்டுப் பிரசு

# சமாதானம் தழைத்தோங்க

## தேசீய அணிவகுப்பை உருவாக்க வாரீர்!

[சௌ-என்-லாய்-நேரு கூட்டறிக்கை ஆசிய மக்களின் கூட்டுறவிற்கு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த வழியை திறந்து விடுகிறது. அமெரிக்க ஆக்கிரமிப்பை எதிர்த்து சமாதானத்தையும், சுதந்திரத்தையும் பாதுகாக்கும் ராஜ பாட்டையை திறந்துவிடுகிறது.

இந்திய கம்யூனிஸ்ட்டுக் கட்சியின் பொலிட்பீரோ உருப்பினரான தோழர் பி. ராமமூர்த்தியின் இக் கட்டுரை, சௌ-நேரு அறிக்கைக்குப் பிறகு சகல அரசியல் கட்சிகள் முன்பும், மக்கள் முன்பும், அவர்களது ஸ்தாபனங்கள் முன்பும் எழும் பிரச்சனைகள் என்ன என்பதையும், அதனடிப்படையில் சமாதானத்திற்காகவும் சுதந்திரத்திற்காகவும் எவ்விதம் ஒரு விரிந்த தேசீய அணியை உருவாக்குவது என்பது பற்றியும் தெளிவுபடுத்த எழுதப்பட்டது.

அடுத்தவாரம் கூடும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி இப் பிரச்சினைகளைப் பற்றி காரிய சாத்தியமான நடவடிக்கைகள் எடுத்து நேரு-சௌ அறிக்கையிலிருந்து எழும் நமது கடமைகளை செவ்வனே நிறைவேற்ற முன்வர வேண்டும்.]



காங்கிரஸ் தலைவர் நேரு, பிரதேசக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர்களுக்கு இந்திய-சீனப் பிரதமர்களின் கூட்டறிக்கை, சீன-பர்மீயப் பிரதமர்கள் கூட்டறிக்கைகளின் முக்கியத்துவம் பற்றி எழுதியிருந்தார். காங்கிரஸ்காரர்களுக்கு மட்டுமல்ல, சமாதானத்தின் நேசர்கள் அனைவருக்கும், நமது தேச சுதந்திரத்தையும் விடுதலையையும் பேணிப் பாதுகாக்க விரும்பும் அனைவருக்கும் அந்த அறிக்கைகள் முக்கியமானவை எனக் குறிப்பிட்டார்.

ஆசிய மக்கள் சக்திகளின் உறவில் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த மாற்றங்கள் சில ஏற்பட்டுள்ளன என்பதை அந்த அறிக்கைகள் கோடிட்டுக் காட்டுகின்றன என்கிறார் நேரு. முற்றிலும் சரியான வாதமே இது.

நேருவின் வார்த்தைகளிலேயே கூறினால் "சென்ற காலத்தில், சென்ற சில நூற்றாண்டுகளாக ஆசியாவிற்கு வெளியிலுள்ளவர்களாலேயே ஆசியாவின் பிரச்னைகள் பைசல் செய்யப்பட்டன". ஆனால் இனிமேல் 'வெளியார்கள் தங்களது தலைவிதியை நிர்ணயிப்பதை ஆசிய மக்கள் அனுமதிக்கப்போவதில்லை" என்பதையே சௌ-நேரு, சௌ-நு அறிக்கைகள் தெளிவாக்குகின்றன.

மற்றொரு உண்மையை, பயங்கரமான உண்மையை பார்க்காமல் நாம் கண்ணைமூடிக்கொள்ள முடியாது. 'ஆசியாவின் தலைவிதியை நாங்கள் தான் நிர்ணயிப்போம்' என ஏகாதிபத்திய வல்லரசுகள் இன்னும் கங்கணம் கட்டிக்கொண்டுள்ளனர் என்பதை நாம் பார்க்காமல் இருக்க முடியாது. இவ்விதப் "போக்குகள் இருக்கின்றன" என்பதை நேருவும் ஒப்புக்கொள்கிறார்.

### ஆசிய மக்கள் சக்திகளின் உறவில் மாற்றம்

சௌ—நேரு, சௌ—நு அறிக்கைகள் ஆசிய சக்திகளின் உறவுகளில் முக்கியமான மாற்றத்தை குறிக்கின்றன என்பது மட்டுமல்ல, ஏகாதிபத்திய அரசுகளின் சதிகாரத் திட்டங்களை குழிதோண்டிப் புதைக்க ஆசிய நாடுகள் எடுத்துக்கொண்ட முதல் முயற்சியுமாகும். ஆசிய மக்களுக்கு உத்திரவிடும், அவர்களை அடக்கி ஒடுக்கி சுரண்டும் கொடுமைகளுக்கு முடிவு கட்டும் முதல் முயற்சியுமாகும் அது.

அக்காரணத்தினாலேதான் மூன்று ஆசியப் பிரதமர்கள் சந்தித்த செய்தியும், அவர்கள்விடுத்த கூட்டு அறிக்கைகளும் ஆசியா வெங்கும் எல்லையற்ற உற்சாகத்தையும் ஆதரவையும் தூண்டின. அந்த அறிக்கைகளை பொதுவாக மக்கள் ஆதரிப்பதுடன் நின்றுவிடுவது போதாது, "பருத்தறிவுடன் உணர்ந்த ஆதரவுதா" வேண்டுமென்ற நேரு கோரியது முற்றிலும் நியாயமானதே.

சௌ-நேரு அறிக்கையின் கொள்கைகளுக்கு ஆதரவாக வெகுஜன ஆதரவைத் திரட்டுவது காங்கிரஸ்காரர்களுடைய பொறுப்பு மட்டுமல்ல; சகல தேசபக்தர்களின் கடமையும் அதுவே. விடுதலையையும் சமாதானத்தையும் விரும்பும் சகலரின் பணியும் அதுவே. குறுகிய கட்சி வரம்புகளுக்கு அப்பால் நின்று அறைகூவும் பணி அது. விரிந்த தேசிய மேடையை உருவாக்க அறைகூவும் பணி. அவ்விதம் விரிந்த தேசிய மேடையை உருவாக்குவதின் மூலமே நம் தாயகத்தின் கோடிக் கணக்கான மக்களை அந்த கடமையை நிறைவேற்ற மதர்ந்து கிளர்ந்தெழச் செய்ய முடியும்.

அவசர அவசியமாக நிறைவேற்றப்பட வேண்டிய கடமை அது. ஏனெனில் நம் நாட்டிற்குள்ளேயே ஏகாதிபத்திய வாதிகளுக்கு பலம் வாய்ந்த நண்பர்களும் கையாட்களும் இருக்கிறார்கள். ஆளும் கட்சியான காங்கிரஸ் கட்சியிலும் அவர்களுக்கு நெருங்கிய அன்பர்களுண்டு. சர்க்காரிலும் அவ்வித நபர்கள் வேரூன்றி இருப்பது பகிரங்க ரகசியம்.

எனவே இந்த நிலையில் மக்களது கண்காணிப்புக் குறையுமானால், சௌ-நேரு பிரகடனத்தின் கொள்கைகளுக்கு ஆதரவாக மக்களைப் பின்பலமாகத் திரட்டும் பணியில் நாம் சளைப்போமானால், அந்தக் கொள்கைகளை ஏற்காத நபர்கள் நம் நாட்டு மக்களின் சுதந்திர சமாதான அபிலாஷைகளின் விரோதிகள் என்பதை அம்பலப்படுத்த வில்லையானால், ஆசியாவின் சமாதானத்திற்கும் உலக சமாதானத்திற்கும் பேராபத்துத்தான் ஏற்படும். நம் சுதந்திரத்திற்கும் நமது தேச ஆதிபத்திய உரிமைக்குந்தான் பேராபத்து ஏற்படும்.

### லட்சியத்தில் தெளிவுவேண்டும்

இந்நற்பணியை மேற்கொள்ளு முன், நமது லட்சியங்களென்ன? சமாதானத்திற்கு குந்தகம் விளைவிக்கும் சக்திகள் எவை? நமது சுதந்திர உரிமைகளுக்கு எத்திசையிலிருந்து ஆபத்துகள் கிளம்புகின்றன? என்பதைப்பற்றி எல்லாம் தெளிவு கொள்வது அவசியம்.

மற்றொரு தேசத்துடன் இந்தியாவை "இணைத்துவிட" வேண்டுமென்ற எந்த தேசபக்தனும் கோரமாட்டான். மற்ற தேசங்களின் விருப்பங்களினாலும் முடிவுகளினாலும் "நம் தேசம் கட்டுப்படுத்தப்பட வேண்டு"மென்றும் கோரமாட்டான். இந்திய கம்யூனிஸ்ட் கட்சி ஒருக்காலும் அவ்விதம் கோரியதில்லை. சுதந்திரமான கொள்கையைக் கையாள வேண்டுமென்றுதான் கோரிவந்துள்ளது. அந்த சொற்களின் உண்மையான அர்த்தத்தில்தான் சொல்கிறோம். ஏகாதிபத்திய அரசுகளில் இதனுடைய அல்லது அதனுடைய மனதை புண்படுத்திவிடுவோமே என்றபயத்தினால் நாம் நிலைகுலைய கூடாது என்றுதான் கூறுகிறோம். நமது மகத்தான ஏகாதிபத்திய எதிர்ப்பு பாரம்பரையில், ஜனநாயகம், சமாதானம் விரும்பும் நமது தேசிய இயக்கப் பாரம்பரையில் தான் நாம் நிற்கவேண்டுமென்று நாங்கள் கோருகிறோம்.

சுதந்திரமான கொள்கை என்று சொன்னவுடன் நேசமனப்பான்மை கொண்ட ஒரு தேசத்தை நாம் எரெடுத்தும் பார்க்கக்கூடாது என்றர்த்தல்ல. ஒரு சரியான கொள்கையை நாம் அங்கீகரிக்கக் கூடாது என்றர்த்தமல்ல. தன்னுடைய கடிதத்தில் நேரு கூறுவதுபோல், நமது சுதந்திரமான கொள்கை என்பது நாம் அங்கீகரிக்கும் மற்றொரு கொள்கையை கடைப்பிடிக்கும் தேசத்துடன், சேர்ந்துவிடாமல் ஆதரிக்கக்கூடாதென்று தடுக்கவேண்டியதில்லை.

இதே விஷயத்தை வேறு வார்த்தைகளில் சொன்னால், ஒரு பிரச்சனையில் சோவியத் யூனியனின் போக்கு இது, அமெரிக்காவின் போக்கு அது, என்று பாராமல், அந்தப் போக்கு சகல மக்களின், தேசங்களின் சுதந்திரத்திற்கும், ஜனநாயகத்திற்கும் பொருத்தமானதாக இருக்கிறதா என்றுதான் இந்திய சர்க்கார் பார்க்கவேண்டும். இதுவே நமது கோரிக்கை.

நமது தேசிய இயக்கம் நமக்கு அளித்த மகத்தான தார்மீக சம்பத்து சத்தியத்தின் வழியில் நிற்பதுதான் என்று நேரு அடிக்கடி கூறுகிறார். பெருமையும் கொள்கிறார். அவரிடமிருந்து நாங்கள் எதிர்பார்ப்பதும் அதுவேதான். சத்தியத்தின், உண்மையின் வழியில் அவர் நிற்க வேண்டுமென்பதுதான்.

### வல்லரசுப் போட்டியா?

அவருக்கு இதை நாம் அறிவுறுத்தவேண்டிய அவசியமிருக்கிறது. காரணம் "இரு வல்லரசுகூட்டணிகளின்" போட்டி என்றுஅவர் அடிக்கடி பேசி வருவது, சீனவுடன் நாம் கொண்டுள்ள நட்பை சிதற அடிக்க முயலும் சக்திகளுக்கு எதிராக நாம் நடத்த வேண்டிய அத்தியாவசியமான போராட்டத்தைப் பலஹீனப்படுத்துவதாக உள்ளது. இவ்விதப் போட்டி பற்றி பேசுவது உண்மைக்கு முரணானதென்பதும் வெளிப்படை.

"வல்லரசுக் கூட்டணிகள்" என்று அவர் பேசும்பொழுது சோஷலிஸ்டு நாடுகளின் முகாம், சோஷலிஸ்டு அல்லாத நாடுகளின் முகாம் என்ற அர்த்தத்தில் அவர் பேசுகிறாரா [...]ல் அதுதான் இல்லை. அ[...] அர்த்தத்தில் அவர் பேசி[...], சோஷியலிஸ்டு அல்லாத நாடு[...]ின் முகாமில் இந்தியா உள்ளது[...]பது வெள்ளிடைமலை.

"வல்லரசுக் [...]ட்டணிகள்" என்று அவர் [...]ம்போது, அதிகாரத்திற்காகப் போட்டிபோடும், உலக மக்கள், [...]சங்கள்மீது ஆதிக்கம் செலுத்த[...]ரண்ட போட்டி போடும், இரு[...]லரசுக் கூட்டணிகள் என்ற அ[...]த்திலேயே அவர் பேசுகிறார்.

25 ஆண்டு[...]லத்திற்குள் பிற்பட்ட நிலையிலிருந்து, பலம்வாய்ந்த நாடாக சோ[...]யத் யூனியன்

**பி. ரா[...]மூர்த்தி**

## எல்லோ[...] சோவியத் சமா[...]னமா[...]

சோவிய[...] யூனியன் உதயமான கால[...]திலிருந்தே உலகெங்குமு[...] ஒடுக்கப்பட்ட மக்களின், கு[...]பாக காலனி மக்களின் ஏகாதி[...]த்திய எதிர்ப்புப் போராட்டத்தி[...]கு உற்சாகமூட்டும் சக்தியா[...]வே விளங்கிவருகிறது. நமது[...] தேசிய விடுதலை இயக்கத்தை[...] எடுத்துக்கொள்வோம். சோ[...]த் யூனியனின் மகத்தான [...]ற்றிகளைக் கண்டு

---

# பாஸ்டீல் சிறை உடை

# புதுவையிலே போர் முண்

## கை, கால்கள் ஒடிபட்டும், கலங்காத கா[...]யர்

ஜூலை 14—1789ல் பிரஞ்சு புரட்சி சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற உரிமைப் போர்முரசு கோஷங்களை மனித குலத்துக்கு வழங்கிய பஸ்தீல் தினம். ஆனால் பிரான்சின் உயர்ந்த பாரம்பரியத்தையும் கலையையும் பரப்புவதே காலனிகளில் தம் ஆட்சியின் நோக்கம் என பீத்திக்கொள்ளும் பிரஞ்சு ஏகாதிபத்யவாதிகள் இத்தினத்தை சிறுமைப்படுத்திவிட்டார்கள். நல்ல உடையணிந்துவந்தால் உயர்ந்த உயர்ந்த சீமைச்சாராயம் மலிவாகவும் ஏன் இலவசமாகவும்கூட கிடைக்கும் என துண்டுப்பிரசுரம் வெளியிட்டு பொதுமக்கள் பணத்தில் சில 'சனவான்கள்' சாராயம் குடிக்கவும் தம் ஏகாதிபத்ய ராணுவத்தின் அணிவகுப்பை நடத்தி விடுதலை கோரும் மக்களை பயமுறுத்தவும்தான் அத்தினத்தைக் கொண்டாடுகிறார்கள். இதனால்தான் ராஜா பண்டிகைநாள் 'ராணுவ அணி வகுப்புநாள்' வெள்ளை உடுப்பு பேர்வழிகளின் ஓசி-குடிநாள் என்ற கருத்து பிரஞ்சிந்திய மக்களிடையே பரப்பப்பட்டுள்ளது.

இவ்வருடம் விழுப்புரத்தில் நடைபெற்ற பிரஞ்சிந்திய விடுதலை சர்வகட்சி இணைப்பியக்க மகாநாட்டில் தேர்ந்தெடுக்கப் பட்ட போராட்ட செயல்கமிட்டி இத்தினத்தை புரட்சிகரமான பாரம்பரியத்தை ஞாபகப்படுத்தும் தினமாகக் கொண்டாடும்படி அறைகூவல் விட்டது.

போராட்ட செயல் கமிட்டியின் பகிரங்கமான அறைகூவல் மக்களிடையே மிக பரபரப்பை ஏற்படுத்திற்று. ஏகாதிபத்ய எதிர்ப்பு விடுதலை வேட்கை மிக்க மக்கள் பல கட்சிகளின் ஐக்கிய முன்னணியான இப்போராட்ட செயல் கமிட்டியின் அறைகூவல்படி, பாஸ்தீல் தினத்தையே மக்கள் தனக்கெதிரான தினமாகக்கொண்டாடி தன் போலித்தனத்தை எங்கு அம்பலப்படுத்திவிடுகிறார்களோ என பிரெஞ்சு ஏகாதிபத்யம் பயந்து தன் ராணுவத்தையும் போலீஸையும் உஷார்படுத்திக் கொண்டது. புதிதாகக் கொண்டு வந்துள்ள பிரெஞ்சு ராணுவம், உள்ளூர் படைகள் அனைத்தும் 13-ம் தேதி இரவு முதல் உறக்கம் கொள்ளவில்லை.

### எங்கும் சுதந்திரக்கொடி - ஏகாதிபத்ய எதிர்ப்பு போர்க்கோஷங்கள்

இருப்பினும் புதுவை மக்கள் பிரெஞ்சு ஏகா[...]பத்ய திட்டங்க[...] உடைத்தெறி[...] விடுதலை வீரா[...]களின் தார்மீக[...] வெற்றியை அன்று நிலைநாட்டினா[...]. 14-ம் தேதி காலை எங்கும் பிரெஞ்சு ஏகாதிபத்ய-எதிர்ப்[...] கோஷங்கள் பொறித்த சு[...]ரொட்டிகள் காட்சியளித்தன. [...]ந்திய யூனியனில் சுதந்[...]க்கொடிகள் ஏற்றப்பட்டிருந்[...]. புதுவை நகரில் ரயில் வண்[...]நிலையம், ஒதியஞ்சாலை மைதா[...]ம், முத்தியால்பேட்டை, [...]னரப்பேட்டை, காமாட்சியம்[...]ன் கோயில் போன்ற பல [...]ான இடங்களில் கொடி பறந்த[...]. ஏகாதிபத்தியக் கயவர் கட்சிக[...] தம் குண்டர் படைக்கு ஆள்[...]ட்டும் இடமாக வைத்துள்ள [...].வெளி தெருவில் மட்டிலு[...]5 இடங்களில் கொடி பறக்க[...]. இது தவிர சுற்றுப்புர கிராம[...]ில் முதலியார்பேட்டை, மு[...]யால்பேட்டை, அரியாகர், [...]ளத்தோட்டம்,

கவர்னர் மாளிகைமுன்பு நடைபெற்ற ஆர்ப்பாட்டத்தில் போலீஸ் தாக்குதலுக்கு இரையான வீரர்கள்.

படுகாயப்[...]டுத்தப்பட்[...] விவே[...]னந்தன்

# அமெரிக்காவை விரட்டுக!

## ப் பிரகாசிக்க,

பேசுகிறாரா என்றால் அதுதான் இல்லை. அந்த அர்த்தத்தில் அவர் பேசினால், சோஷியலிஸ்டு அல்லாத நாடுகளின் முகாமில் இந்தியா உள்ளது என்பதுவெள்ளிடைமலை.

‘‘வல்லரசுக் கூட்டணிகள்’’ என்று அவர் கூறும்போது, அதிகாரத்திற்காகப் போட்டிபோடும், உலக மக்கள், தேசங்கள்மீது ஆதிக்

பி. ராமமூர்த்தி

கம் செலுத்த விரண்ட போட்டி போடும், இரு வல்லரசுக் கூட்டணிகள் என்ற அர்த்தத்திலேயே அவர் பேசுகிறார்.

25 ஆண்டு காலத்திற்குள் பிற்பட்ட நிலையிலிருந்து,பலம்வாய்ந்த நாடாக சோவியத் யூனியன் வளர்ந்துவிட்டதற்காக பண்டித நேரு அதன்மீது குற்றம் சாட்டுகிறாரா? பொருளாதாரரீதியிலும் தார்மீக ரீதியிலும், அரசியல்துறையிலும் ஐக்கியமடைந்து பலம் பெற்றுள்ளதற்காக சோவியத்யூனியன்மீது குற்றம் சாட்டுகிறாரா? அதேபோல் சீனாவும் மிகப்பெரும் ஏகாதிபத்தியக் கொள்ளைக் கூட்டத்தினரையே புறமுதுகு காட்டி ஓடச் செய்யும் விதத்தில் பலம் பெற்று, ஒன்றுபட்ட நாடாக வளர்ந்துள்ளதற்காகக் கோபிக்கிறாரா? என்பதுதான் கேள்வி.

மற்ற தேசங்களின் விவகாரங்களில் இந்த நாடுகள் தலையிட்டனவா அல்லது தங்களது தார்மீக சக்தியை எல்லா தேசங்களின் சுதந்திரத்திற்காகவும் விடுதலைக்காகவும் உபயோகப்படுத்த வந்தனவா அல்லது அந்நன்னோக்கிற்கு விரோதமாகச் சென்றனவா என்பதுதான் பிரச்சனை.

### எல்லோருடனும் சோவியத் யூனியன் சமாதானமாக வாழ்கிறது

சோவியத் யூனியன் உதயமான காலத்திலிருந்தே உலகெங்குமுள்ள ஒடுக்கப்பட்ட மக்களின், குறிப்பாக காலனி மக்களின் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்திற்கு உற்சாகமூட்டும் சக்தியாகவே விளங்கிவருகிறது. நமது தேசிய விடுதலை இயக்கத்தையே எடுத்துக்கொள்வோம். சோவியத் யூனியனின் மகத்தான வெற்றிகளைக் கண்டு நமது தேசிய இயக்கம் சென்ற காலத்தில் உற்சாகமடையவில்லையா? நேருவின் சென்றகால பேச்சுக்களையும் எழுத்துக்களையுமே எடுத்துப்பாருங்கள்! கவி தாகூரின் பேச்சுக்களையும் எழுத்துக்களையும் புரட்டிப் பாருங்கள்! நமது கூற்றுக்கு சிறந்த அத்தாட்சிகள் அவை.

அதேபோன்று சீனதேசத்தின் மகத்தான புரட்சி நம்மிடையே உணர்ச்சிப் பெருக்கெடுக்கச் செய்தது. இன்று சீனக் குடியரசு உய்த்து ஓங்கி வளரும் ஒவ்வொரு நாளும் காலனி மக்களுக்கு கொள்கை, நேருவின் கண்டுபிடிப் உற்சாகத்தையும் அவர்களது இறுதி வெற்றியில் நம்பிக்கையையும் ஊட்டுகிறது.

இதற்காக சோவியத் யூனியனையும், சீனாவையும் யாராவது ‘கோபித்துக்கொள்ள முடியுமா? நீங்கள் ஏன் உங்கள் நாட்டில் புரட்சி செய்தீர்கள்’ என்று அவர்களிடம் கேட்க விரும்புகிறார்களா? ‘உங்கள் நாட்டின் பொருளாதார வாழ்வை ஏன் வளப்படுத்தினீர்கள்’ என்று கேட்பதா? இவ்வித நடவடிக்கைகள் மூலம் ஏகாதிபத்தியத்தை பலஹீனம்படுத்தி, ஏகாதிபத்தியங்களின் காலின்கீழ் மிதிபடும் மக்கள் தங்கள் சுதந்திரத்திற்காகவும், ஜனநாயகத்திற்காகவும், சோஷியலிஸத்திற்காகவும் போராட உற்சாக மூட்டும் ஒளி விளக்காக விளங்குவதற்காக கோபித்துக் கொள்வதா? சோவியத் யூனியன் மேலும், சீனாவின் மேலும் இவ்விதம் ஆத்திரப்படுவதின் காரணந்தானென்ன?

“உலகிலுள்ள மிகப் பெரும் தேசங்கள் மற்ற தேசங்களின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுவதில்லை என்ற கொள்கையை இன்றே கடைப்பிடிப்பார்களானால், இன்றைய உலக நிலையில் உடனடியான மாற்றம் ஏற்படும் என்பதில் சந்தேகமில்லை.”

என்று நேரு எழுதுகிறார்.

முற்றிலும் உண்மை! ஆனால் இந்தக் கொள்கையைக் கடைப்பிடிக்க மறுப்பவர்கள் யார்? சோவியத் யூனியனும் சீனாவும் மறுக்கின்றனவா? அல்லது மறுப்பது அமெரிக்காவா?

பல தேசங்கள் சமாதானமாக அடுத்தடுத்து வாழ முடியும் என்ற பல்ல என்பதுஅவருக்கேதெரியும். சோவியத் யூனியன் பிறந்தகாலத்திலிருந்தே அது அப்பழுக்கின்றி அனுஷ்டித்து வரும் அடிப்படையான கொள்கை அதுவாகும்.

சோஷலிசத்தை தனி ஒரு நாட்டில் உருவாக்கமுடியும் அல்லது ஒரு சில நாடுகளில் வெற்றிகரமாக்க முடியும் என்பது லெனினது பிரசித்திபெற்ற, நடைமுறையில் வெற்றிகண்ட கொள்கை. அந்தக் கொள்கையைப் பிரகடனப் படுத்தி அவர் கோரியதென்ன? ஏகாதிபத்திய வல்லரசுகள் சோவியத் யூனியனின் வளர்ச்சியில் தலையிடக் கூடாது என்பதுதானே? சமாதானமாக இரு வெவ்வேறான சமுதாய அமைப்புகள் அடுத்தடுத்து வாழ அனுமதிக்க வேண்டுமென்பதுதானே?

ஸ்டாலின் தலைமையின் கீழ் சோவியத் யூனியன் கடைப்பிடித்துவந்த கொள்கையின் சாரம் இதுதான் என்பது நேருவிற்குத் தெரியாதா? 1934ல் ராய் ஹோவார்ட் என்ற அமெரிக்க நிருபருக்குப் பேட்டி ஒன்று அளித்தார் ஸ்டாலின்—அதில் “புரட்சியை ஏற்றுமதி செய்வதென்பது சுத்த பைத்தியக்காரத்தனம். ஒவ்வொரு தேசமும் தான் விரும்பினால் தனக்குத் தேவையான புரட்சியை உருவாக்கிக் கொள்ளும். அந்த தேசம் விரும்பாவிடில் புரட்சி என்பது நடக்காது” என்றார்.

1952-ம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் 19-வது மகாநாட்டில், ஸ்டாலின் முன்னிலையில், ஜி. எம். மாலென்காவ் பேசினார்.

“இன்றுள்ள சக்திகளின் அணிவகுப்பில் சோவியத் யூனியனும், மக்கள் ஜனநாயக முகாமிலுள்ள நாடுகளும் தங்களுடைய ஜீவாதாரமான நலன்களைப் பாதுகாக்க இரு வெவ்வேறான சமுதாய அமைப்புகள், அடுத்தடுத்து வாழ முடியும் என்ற கொள்கையை விடா முயற்சியுடன் கையாள்வதை தங்களது கடமையாகக் கொள்ளவேண்டும். ஜனநாயக முகாமிலுள்ள தேசங்கள் மட்டுமல்ல, உலகிலுள்ள எல்லா தேசங்களுமே இக்கொள்கை கையாள வேண்டும். இது அல்லாமல் வேறு எந்த வழியில் சென்றாலும் அது நம்பிக்கை அளிக்காத முயற்சியாகவும், தவிர்க்கமுடியாத தோல்வி தரும்” என்றார்.

சோவியத் யூனியனுக்கும், சீனாவிற்கும் மேற்கூறிய கொள்கைப் பிரகடனங்கள், வெறும் அர்த்தமற்ற வார்த்தைகள் அல்ல; என்பது நேருவிற்கு நன்கு தெரியும். ஆரம்ப முதல் இன்றுவரை அக்கொள்கையே அந்நாடுகள் அணுவும் பிசகாது அனுஷ்டித்து வருகின்றன என்பதும் தெரியும்.

### சோவியத்தின் நடைமுறை

சோவியத்யூனியனையே எடுத்துக் கொள்ளுங்கள். அது உதயமாகிய ஒரு சில மாதங்களுக்குள்ளாகவே ஜார் ஏகாதிபத்தியத்தின் காலடியில் மிதிபட்டுவந்த பின்லந்திற்கு பரிபூரண சுதந்திரம் வழங்கியது. பின்லந்தின் சட்ட சபையை ஒரு தீர்மானத்தின் மூலம் கோரியபடியே, அந்நாட்டிற்கு பரிபூரண சுயநிர்ணய உரிமைக் கொள்கையின் அடிப்படையில் சுதந்திரம் வழங்கியது.

பின்லந்திலுள்ள சமுதாய அமைப்பு சோவியத் யூனியனில் உள்ளதற்கு முற்றிலும் மாறானது தான். என்றாலும் சென்ற முப்பத்தேழாண்டு காலமாக பின்லந்தின் உள்நாட்டு விவகாரங்களில் சோவியத் யூனியன் தலையிட்டதுண்டா?

### பின்லந்தில் நடந்தது

1939ல் ஹிட்லருடன் சேர்ந்து கொண்டு சோவியத் யூனியனுக்கு எதிராக பின்லந்தில் ஆட்சிப்புரிந்த கூட்டம் சதிபுரிந்தது. பின்லந்தின் எல்லையிலிருந்து பீரங்கிகுண்டினால் தாக்கும்விதத்தில் அருகாமையிலிருந்த லெனின்கிராடைத் தாக்குவதற்கு தளமாக பின்லந்து உபயோகப்படுத்தப்படும் ஆபத்து ஏற்பட்டது. அவ்வித அபாயத்தை தவிர்ப்பதற்காகவே, தனது பாதுகாப்பை முன்னிட்டே, சோவியத் யூனியன் பின்லந்திலிருந்த சதிகாரக் கூட்டத்திற்கெதிராக நடவடிக்கை எடுக்க நிர்ப்பந்திக்கப்பட்டது. அந்த சமயத்தில்கூட தோல்வியடைந்த பின்லந்தின்மேல் சோவியத் யூனியன் தனது சமுதாய அமைப்பை திணிக்கவில்லை. மாறாக தனக்குச் சொந்தமான பிரதேசத்தை கொடுத்து பதிலாக வேறு ஒரு பகுதியை வாங்கிக்கொண்டது. அவ்வளவுதான். பின்லந்து முன்னைப்போலவே ஒரு முதலாளித்துவ நாடாகவே இருந்துவந்தது.

சோவியத் யூனியன்மேல் ஹிட்லர் படையெடுத்த பின்பு ஹிட்லருடன் சேர்ந்துகொண்டு பின்லந்தும் சோவியத்திற்கெதிராக யுத்தம் தொடுத்தது. ஹிட்லரும் அவனது கூட்டாளிகளும் நிர்மூலமாக்கப்பட்டு, தோற்கடிக்கப்பட்ட பின்புகூட, தோல்வியுற்ற பின்லந்தின்மேல் சோவியத் யூனியன் தனது சமுதாய அமைப்பை திணிக்கவில்லை. இன்றைக்கும் கூட பின்லந்து ஒரு முதலாளித்வ நாடாகவே இருந்து வருகிறது.

### கிழக்கு ஐரோப்பாவில்

ஹிட்லரை முறியடித்த பின்பு கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலுள்ள மக்கள், அழுகி நாற்றமெடுத்துவிட்ட தங்களது முதலாளித்துவ சமுதாய அமைப்புகளை குழிதோண்டி புதைத்துவிட்டு, சோஷியலிஸ பாதையில் வெற்றிநடைபோட முன்வந்தனர். நிச்சயமாக சோவியத் யூனியன் புரிந்த குற்றமல்ல இது. அவ்விதம் சோஷியலிஸ பாதையில் செல்ல முனைந்துவிட்ட பிறகு ஏகாதிபத்ய வல்லூறுகள் அந்த நாட்டு மக்களின் முடிவை மாற்றி பண்டைக்கால முதலாளித்வ அமைப்பையே மீண்டும் அவர்களது தலைமேல் சுமத்த செஞ்சேனை அனுமதிக்கவில்லை. ‘பெருநோய் பிடித்துவிட்ட தங்களது முதலாளித்வ அன்பர்களை மீண்டும் அத்தேசங்களின் அதிபதிகளாக்க அந்த ஏகாதிபத்ய வல்லூறுகளுக்கு செஞ்சேனை அனுமதிசீட்டு தரவில்லை. அவ்விதம் மறுத்ததின்மூலம் அந்த கிழக்கு ஐரோப்பிய நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிட்டது என்று கூறிவிட முடியாது. ஒவ்வொரு மக்களும் ஹிட்லரின் காலடியின் கீழிருந்து விடுதலை செய்யப்பட்ட தாங்கள் விரும்பிய ஆட்சிமுறையை, எதிர்காலத்தை தாங்களே ஜனநாயக முறையில் தேர்ந்தெடுத்துக்கொள்ள அனுமதித்தது செஞ்சேனை அவ்வளவுதான்.

### மற்ற நாடுகளுடனும் சமாதான வாழ்வு

பல ஆண்டுகளாக சோவியத் யூனியன் அதன் எல்லையோரங்களிலுள்ள துருக்கி—பர்ஷிய போன்ற தேசங்களுடன் சமாதானமாகவே வாழ்ந்து வருகிறது. இத்தேசங்கள் சோவியத் யூனியனிலுள்ள அமைப்பிற்கு முற்றிலும் மாறான அமைப்புடையதாகும்.

# உடைபட்ட நாளில்

# ர் மூண்டது

## ந காரியர்

படுகாயப்படுத்தப்பட்ட விவேகானந்தன்

பிரெஞ்சு ஏகாதிபத்ய திட்டங்களை உடைத்தெறிந்த விடுதலை வீரர்களின் தார்மீக வெற்றியை அன்று நிலைநாட்டினர். 14-ம் தேதி காலை எங்கும் பிரெஞ்சு ஏகாதிபத்ய-எதிர்ப்பு கோஷங்கள் பொறித்த சுவரொட்டிகள் காட்சியளித்தன. இந்திய யூனியனில் சுதந்திரக்கொடிகள் ஏற்றப்பட்டிருந்தன. புதுவை நகரில் ரயில் வண்டி நிலையம்,ஒதியஞ்சாலை மைதானம், முத்தியால் பேட்டை, [illegible]ரப்பேட்டை, காமாட்சியம்மன் கோயில் போன்ற பல பிரதான இடங்களில் கொடி பறந்தது. ஏகாதிபத்தியக் கயவர் கட்சிகள் தம் குண்டர் படைக்கு ஆள் திரட்டும் இடமாக வைத்துள்ள [illegible] வெளி தெருவில் மட்டிலும் 5 இடங்களில் கொடி பறந்தது. இது தவிர சுற்றுப்புற கிராமங்களில் முதலியார் பேட்டை, முத்தியால்பேட்டை, அரியகள், [illegible]ளத்தோட்டம், குசப்பாளையம், சாரம்,பாக்குமுடையான் பேட்டை, லாஸ்பேட்டை கரடிகுப்பம், முத்திரைபாளையம், ஐயங்குட்டி பாளையம், தர்மாபுரி மற்றும் இதுபோன்ற தொழிலாளர் கிராமங்கள் மட்டுமின்றி கோபாலன்கடை, முத்துப்பிள்ளை பாளையம், சேதராப்பட்டு, காரூர், துத்திப்பட்டு போன்ற தூரத்து விவசாய கிராமங்களிலும் கொடிகள் ஏற்றப்பட்டு சுவரொட்டிகளும் ஒட்டப்பட்டிருந்தன. மொத்தம் சுமார் 40 கிராமங்களில் 200கொடிகள் ஏற்றப்பட்டிருந்தன. கொடிக்காக புதுவை மக்கள் கடும்போர் நடத்திய ஏப்ரல் 13ல் கொடியேற்றுவதில் பங்கெடுத்துக்கொண்டதை விட அதிகமான கிராமங்கள் அன்று கொடியேற்றின. முதலியார்பேட்டை, கரடிகுப்பம் போன்ற இடங்களில் போலீஸ் ஸ்டேஷன்களுக்கு அருகிலேயே கொடிகள் ஏற்றப்பட்டன. ஏப்ரல் 13ல் ஏற்றியதுபோல் 40 அடி மரத்தில் ஒதியஞ்சாலை மைதானத்தின் மத்தியில் கொடி பறக்க விடப்பட்டது.

### முத்தியால்பேட்டை எல்லையில் பிரஞ்சு போலீஸ் ராணுவம் ஓட்டம்

சுதந்திரக் கொடியைக் கண்டதும் குலை நடுக்கம் கொள்ளும் பிரஞ்சு போலீஸ் ராணுவம் காலை முதலே கொடி அகற்றுவதும், சுவரொட்டிகளைக் கிழிப்பதுவுமே தொழிலாகக் கொண்டிருந்தனர் எனினும் எத்தனை இடங்களில் தான் சுவரொட்டிகளை கிழிக்க முடியும்? எல்லாவிடங்களிலும் கொடியை இறக்கிவிடமுடியுமா? இம்முயற்சியில் ஏகாதிபத்யவாதிகளின் தோல்விக்குச் சரியான எடுத்துக்காட்டாய் விளங்கிற்று

போராட்டவீரர்களுடன் ஐக்கிய செயல் கமிட்டித் தலைவர்.

முத்தியால்பேட்டை கொடிப் போராட்டம்.

முத்தியால் பேட்டையில் பல இடங்களில் கொடி ஏற்றப்படுகிறது. எல்லையில் மட்டும் 5 இடங்களில் ஏற்றப்பட்டிருந்தது. போலீஸ்காரர்களின் தலைக்குமேலேயே அவர்கள் முகாம் அடித்திருந்த இடத்திலேயே கொடி ஏற்றப்பட்டன. இந்த எல்லையில் பிரஞ்சு ஏகாதிபத்ய கொடும்பாவி நிறுத்தப்பட்டிருந்தது. செருப்பாலும் துடைப்பத்தாலும் மக்கள் அதனை அடித்து பிரஞ்சு ஏகாதிபத்யத்தின் மீது தம் அருவருப்பையும் ஆத்திரத்தையும் வெளிப்படுத்தினார்கள். இதனைக் கண்ட வெள்ளை பிரஞ்சு ராணுவ உத்யோகஸ்தர்கள் சிலர் பிரஞ்சு எல்லைக்குள்ளிருந்து கீழ்த்தரமான முறையில் கையாண்டி செய்தார்கள். அவர்களின் கையாட்கள் சிலர் எல்லையில் கூடியிருந்த அகதிகள் மீது கற்கள் வீசியதாகவும் சொல்லப்படுகிறது. இதனால் ஆத்திரம் கொண்ட அகதிகளும் மக்களும் திருப்பித் தாக்க ஆரம்பித்தார்கள்.

ஏகாதிபத்தியவாதிகள் ஸ்டென்கன், லைட் மிஷின் கன் போன்ற கனத்த ஆயுதங்களையும் குவித்து அவைகளைக்கொண்டு சுடுவதாக அகதிகளையும் பொதுமக்களையும் விரட்ட முயற்சித்தார்கள். மக்களின் கோபாக்கினியைக் கிளறி விட்டார்கள். அதன் பிறகு பார்த்திருக்கவேண்டும் மக்களுக்கும் பிரஞ்சு போலீஸ்-ராணுவத்துக்கும் நடந்த சண்டையை. மக்களின் கைக்கற்களின் முன்னே துப்பாக்கிகளும் கனத்த ஆயுதங்களும் ஸ்தம்பித்துவிட்டன. வெள்ளை உத்தியோகஸ்தர்களும் சிப்பந்திகளும் ஓட்டம் பிடித்தார்கள். போலீஸ் முகாமிலே மற்றும் அதனருகில் பிரஞ்சிந்திய பிரதேசங்களிலோ இந்த இந்திய யூனியன் சுதந்திரக் கொடியை அகற்றும் ‘தம் வழக்கமான’ வேலையைக்கூட செய்வதற்கு அவர்கள் துணிவு கொள்ளவில்லை. அந்த வட்டார பிரஞ்சுப்பகுதி பூராவும் அன்று மாலை வரை எந்த பிரஞ்சு போலீஸ் ராணுவ உத்யோகஸ்தர்

(9-ம் பக்கம் பார்க்க)

# அமெரிக்க குறுக்கீடுகளின் ஜாபிதா

மேலே கூறிய நடத்தையுடன் அமெரிக்காவின் யோக்யதையை ஒப்பிட்டுப் பாருங்கள். சின்னஞ்சிறு கௌடிமாலாவை சமாதானமாக தன் அருகில் வாழவிட விரும்பவில்லை. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கத்தை தூக்கி எறிந்தது. அந்த அரசாங்கம் செய்த குற்றமென்ன? தொழிற் சங்கங்களை சட்டரீதியாக ஆக்கியது தானே! அமெரிக்க ஏகபோக கம்பெனி ஒன்றுக்கு, கௌடிமாலாவிற்கு சொந்தமான நிலத்தை எடுத்து நிலமில்லா விவசாயிகளுக்குப் பங்கிட்டு கொடுத்தது தானே! இதுதான் இன்றைய கௌடிமாலா புரிந்த குற்றம். உள்நாட்டு விவகாரங்களில் அமெரிக்கா தலையிடாத ஒரு தேசம் உலகில் (முதலாளித்வ உலகில்) இன்று உண்டா? இரானில் மொஸாதிக் அரசாங்கத்திற்கெதிராக சதிகள் புரிந்து அதை கவிழ்த்தது அமெரிக்கா! இதற்குக் காரணமென்ன? ஏகாதிபத்ய எண்ணை முதலாளிகளின் நலன்களை மொஸாதிக் சர்க்கார் தைர்யத்துடன் தொட முன் வந்ததுதான்.

மத்ய கிழக்கிலுள்ள ஒவ்வொரு தேசமும் இன்று அமெரிக்காவின் சதிச் செயல்களின் குப்பை மேடுகளாக உள்ளன.

### சியாங்கிற்கு சப்பைக்கட்டு

கோடிக்கணக்கான டாலர் செலவிட்டு சியாங்கே ஷேக் ஆட்சிக்கு முட்டுக் கொடுப்பது அமெரிக்கா. ஜப்பானின் தலைமேல் ஒரு ஒப்பந்தத்தைத் திணித்தது. அமெரிக்கத் தளங்களை உடைய காலனியாக, அமெரிக்கத் துருப்புகள் மேலாதிக்கம் புரியும் தேசமாக இன்று ஜப்பான் விளங்குகிறது.

டச்சு ஏகாதிபத்தியம், லிங்கஜ்ஜட்டி ஒப்பந்தத்தை கிழித்தெறியவும், ராணுவ உதவிகொடுத்து, இந்தோனேசியாவை தாக்கும்படியும் 1948ல் தூண்டி விட்டது அமெரிக்கா. நேருகூட இதைப் பகிரங்கமாக எதிர்க்கும்படி நேர்ந்ததே!

“இந்தோனேசியாவின் மேல் ஏவிவிடப்பட்ட ஆக்கிரமிப்பிற்கு ஒப்புதல் தெரிவிக்கும் சில வல்லரசுகளின் போக்கைக் கண்டு நாம் வருந்துகிறோம். ஹாலந்து (அதாவது டச்சு ஏகாதிபத்தியம்) மேற்கத்திய யூனியனில் ஒரு மெம்பர். அந்த யூனியனின் கொள்கை

(8-ம் பக்கம் பார்க்க)

# ஆசியாவிலிருந்து அமெரிக்காவை விரட்டுக!

(மத்திய பக்க தொடர்ச்சி)

தானென்ன? அந்த மேற்கத்திய யூனியனிடமிருந்து பண உதவி (டச்சு ஏகாதிபத்தியத்திற்கு) தாராளமாகக்கிடைத்து வருகிறது.'' என்று நேரு 1949 ஜனவரி 1ல் பேசினார்.

அந்த சமயத்தில் மக்கள் சீனா இன்னும் உதயமாக வில்லை என்பதை மறந்து விடாதீர்கள். எனவே மானசீகமாகக்கூட "கம்யூனிஸ்டு ஆக்கிரமிப்பு அபாயம்" ஏற்பட்டு விட்டதென்று அமெரிக்க ஆளும் வர்க்கம் வாய்ச்சவுடால் அடிக்க முடியாது.

### இந்தோ சீனாவில்

ஹோ-சி-மின் சர்க்காரைக் கவிழ்ப்பதற்காக பிரெஞ்சு ஏகாதிபத்தியத்திற்கு சகல வித உதவியையும் அளித்தது அமெரிக்கா. இதே ஹோ-சி-மின் சர்க்காரை பிரான்சும், அன்று சீனாவிலிருந்த சியாங்கே ஷேக் சர்க்காரும், பார்லிமெண்டில் நேரு எடுத்துக்காட்டியதுபோல், அங்கீகரித்திருந்தன என்பதை மறந்துவிடக்கூடாது. அபரிமிதமான அமெரிக்க உதவி தந்தும் கூட படுதோல்வியை பிரெஞ்சு ஏகாதிபத்தியம் எதிர்நோக்கி இருக்கும்போது, பிரான்ஸ் சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ள விரும்பியபோதிலும், அவ்வித ஒப்பந்தம் ஏற்படாமலிருக்க அமெரிக்கா இன்று சகல முயற்சியும் செய்கிறது.

### பாக்கிஸ்தானில்

இவ்வளவு தூரம் போவானேன்! பாக்கிஸ்தானில் நடப்பதைப் பாருங்கள்! உள்நாட்டு விவகாரங்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளில் அமெரிக்க தூதர் பாக்கிஸ்தான் சர்க்காருக்கு உத்தரவு போடும் அலங்கோலத்தைப் பாருங்கள்!

### காஷ்மீரில்

நம் நாட்டின் உள் விவகாரங்களில் தலையிடுவது யார்? ஆரம்பத்திலிருந்து காஷ்மீர் விவகாரத்தில் தலையிட்டது யார்? அங்கு இந்தியாவிற்கு எதிராக சதிகள் புரிந்து தலையிட்டது அமெரிக்காவும் பிரிட்டனுமா? அல்லது சோவியத் யூனியனும் சீனாவுமா?

### ஐரோப்பாவில்

ஐரோப்பாவை எடுத்துக்கொள்ளுங்கள். பிரான்ஸ், இத்தாலி, கிரீஸ், இன்னும் ஒவ்வொரு தேசத்தின் உள் விவகாரத்தில் அமெரிக்க ஏகாதிபத்தியம் தலையிடுவது உலகறிந்த உண்மை.

ஐரோப்பிய ராணுவக் கூட்டணி ஒப்பந்தத்தில் கையொப்பமிடாவிட்டால் பிரான்ஸிற்கும், இத்தாலிக்கும் அமெரிக்க உதவி இல்லை என்று பயமுறுத்துகிறது அமெரிக்கா. மேற்கு ஜெர்மனியை மீண்டும் ஆயுதபாணியாக்கவேண்டுமென்று வற்புறுத்துகிறது.

சென்ற ஏப்ரல் மாதத்தில் அமெரிக்க ஜனாதிபதி ஐஸன்ஹோவர் பிரான்ஸிற்கு ஒரு கடிதமெழுதியிருந்தார். அந்தக் கடிதத்தைச் சுட்டிக் காட்டி பிரான்ஸிலுள்ள அமெரிக்கத் தூதர் ஜூன் 20ந் தேதி பாரிஸில் பேசியதைப் பாருங்கள்.

"ஐரோப்பிய ராணுவக் கூட்டணிக்கு விரோதமான எந்த நடவடிக்கையையும் அமெரிக்காவின் பாதுகாப்பிற்கே விரோதமான ஆபத்தாகவே கருதும் என (ஐஸன்ஹோவர்) கடிதம் தெளிவு படுத்துகிறது.

"(பிரான்ஸிற்கு) வெளியே இருந்து வரும் ஆக்கிரமிப்பு மட்டுமல்ல, பிரான்ஸிற்குள்ளேயே இருந்துதோன்றும் கலகமும்அமெரிக்கப் பாதுகாப்பிற்கு அபாயம் விளைவிக்கக்கூடியதென்றே அது கருதுகிறது."

இதுதான் பிரான்ஸிலுள்ள அமெரிக்கத் தூதரின் பேச்சு. பகிரங்கமாகவே பிரகடனம் செய்கிறார்கள், பிரான்ஸின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுவோம் என்று. பிரெஞ்சு மக்கள் ஐரோப்பிய ராணுவக் கூட்டணியை நிராகரிக்கும் ஒரு அரசாங்கத்தைத் தேர்ந்தெடுத்தால், அதற்கு எதிராக டாலர் மட்டுமல்ல, அமெரிக்க ராணுவமும், யுத்த தளவாடங்களும் உபயோகப் படுத்தப்படும் என மிரட்டுகிறார்கள். காரண பிரான்ஸ் செய்யும் அவ்வித முடிவு அமெரிக்காவின் பாதுகாப்பிற்கே ஆபத்தை விளைவிக்குமாம்.

இத்தனைக்கும் சிகரம் வைத்தால் போன்று, ஒவ்வொரு ஆண்டும் தனது பட்ஜெட்டில் 100 கோடி டாலர் பணம் ஒதுக்கி, மற்ற தேசங்களில் மறைமுக ஐந்தாம் படை வேலை செய்ய மீர் ஜாபர்களைத் திரட்டும் ஏற்பாடுகளையும் ஜரூராகச் செய்து வருகிறது அமெரிக்கா.

இவ்விதம் சமாதானமாக அடுத்தடுத்து வாழமுடியும் என்ற பிரகடனத்தை கொடிய விஷத்தைப் போன்று அமெரிக்கா வெறுக்கிறது. இதில் ஆச்சர்யமென்ன? சௌ-என்-லெயுடன் கூட்டாக அறிக்கை விட்டதற்காக நேருவை எதிர்த்த வெறிப்பிரச்சாரத்தை அமெரிக்கப் பத்திரிகைகள் பூராவும் கட்டவிழ்த்துவிட்டிருப்பதிலும் ஆச்சர்யமில்லை.

பிரதமர் நேரு கூறியதுபோல, "இவ்விதப் பிரகடனங்கள் நேர்மையான மனப்பான்மையுடன் ஏற்கப்படாமல்போனால் கூட, சமாதானத்திற்கும் மாற்றார் விவகாரங்களில் தலையிடாதிருப்பதற்கும் சாதகமான சக்தியை அவை உருவாக்கும்" அல்லவா?

சமாதானத்திற்கு சாதகமான, பிறநாட்டு விவகாரங்களில் தலையிடாதிருப்பதற்குச் சாதகமான ஒரு சக்தியை அமெரிக்கா விரும்பவில்லை. யுத்தத்தையும் தலையீட்டையுமே அமெரிக்கா விரும்புகிறது.

இன்றைய நிலைமை, நிதர்சனமாகக் காணும் உண்மை இவ்வாறு இருக்க, சமாதானமாக அடுத்தடுத்து வாழும் கொள்கையை, பிறநாட்டு விவகாரத்தில் தலையிடாதிருக்கும் கொள்கையை அங்கீகரிக்க மறுப்பது அமெரிக்காவும் மேற்கத்திய வல்லரசுகளும்தான் என்று திட்டவட்டமாகச் சொல்ல நேரு தயங்குவது ஏன்? அவ்விதப் போக்கால் உலக சமாதானத்திற்கே அந்நாடுகள் ஊறு விளைக்கின்றன என்று அறுதியிட்டுக் கூற நேரு மறுப்பது ஏன்?

"உலகின் மிகப்பெரும் தேசங்கள் இந்தக் கொள்கையைக் கடைப்பிடிப்பார்களானால்" என்று நேரு எழுதுவதின் அர்த்தமென்ன? இவ்வித எழுத்தின் மூலம் மேற்கத்திய வல்லரசுகள் மட்டுமல்ல, சோவியத் யூனியனும் சீனாவும் அந்தக் கொள்கையை அங்கீகரிக்க மறுக்கின்றன என்ற மனோபாவத்தை உண்டாக்குவது தானே அவரது கருத்து? இதுதான் சுதந்திரமான கொள்கையா? எந்தக் கூட்டணியிலும் சேராதிருக்கும் கொள்கையைத்தான் கையாள்வதாகச் சொல்லிக்கொள்வதின் அளவுகோல் இதுதானா?

இந்தக் கோணத்திலிருந்து கொண்டுதான், "இரண்டு வல்லரசுக் கூட்டணிகளுக்கு" அப்பால் தானிருப்பதாகவைத்துக்கொண்டு நேரு பேசுகிறார்.

### சொல் அல்ல செயல் என்ன?

"இன்று இருபெரும் சக்திகள் உலகில் உள்ளன. அமெரிக்காவும் இன்னும் பல மேற்கு வல்லரசுகளும் கம்யூனிஸத்தைக் கண்டு அஞ்சுகின்றன. பிற நாடுபிடிக்கும் நோக்கத்தையும், பிற நாடுகளில் ஆதிக்கம் செலுத்தும் போக்கையும் உடையது கம்யூனிசம் என்று அஞ்சுகிறார்கள். அதே போன்று கம்யூனிஸ நாடுகள் தங்களை மற்ற நாடுகள் சுற்றி வளைத்துக்கொண்டு அழித்தொழிக்க முற்படுகின்றன என்று அஞ்சுகின்றன" என்று எழுதுகிறார் நேரு.

ஏகாதிபத்தியவாதிகள் என்ன சொல்லுகிறார்கள் என்பதைப் பற்றி நமக்குக் கவலை இல்லை. அவர்கள் என்ன செய்கிறார்கள் எவ்வித நடவடிக்கை எடுக்கிறார்கள் என்பதுதான் முக்கியம். வார்த்தைகளை விட செயல்களே முக்கியம்.

அந்தக் காலத்தில் ஹிட்லர்கூட தொண்டைகிழிய கத்தினான், சோவியத் யூனியனிடமிருந்து தான் தனக்கு ஆபத்து வருகிறது என்று. அன்று நேரு சோவியத் யூனியனையும் ஹிட்லர் ஜெர்மனியையும் குறிப்பிடும்பொழுது சமத்துவப் படுத்தி பேசவில்லை. கம்யூனிஸத்தைப் பற்றிய ஹிட்லரின் பயத்தினால்தான், சோவியத் யூனியனின் பிறநாட்டு ஆதிக்கப்போக்கால்தான் ஹிட்லர் தாக்கிவிடுவானே என்று சோவியத் யூனியன் பயப்படுவதினால்தான் யுத்த அபாயம் ஏற்படுகிறது என்று அன்று நேரு சொல்லவில்லை.

மாறாக, கம்யூனிஸ பூச்சாண்டி காட்டும் கட்டுக்கதைகளை சுட்டுப் பொசுக்கினார். ஹிட்லருக்கு எதிராக மக்களை திரட்டினார் நேரு. அது அன்று.

அதேபோல் இன்றும் நமது தேசீய இயக்கத்தின் உன்னத பாரம்பரைக்கு ஒப்ப, நேரு நடந்து கொள்ளவேண்டும் என எதிர்பார்க்க மக்களுக்கு உரிமை உண்டு. அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் தலைமையில் செய்யப்படும் பிரசாரத்திற்கு இலக்காகக் கூடாதென எதிர்பார்க்க மக்களுக்கு உரிமையுண்டு. மாறாக உண்மையை அப்பட்டமாக மக்கள் முன்வைப்பதையே மக்கள் அவரிடமிருந்து எதிர்பார்க்கின்றனர்.

நேருவே கூறுகிறார்:

"கம்யூனிஸ்டு நாடுகள் தங்களைச் சுற்றி பல ராணுவ தளங்கள் அமைக்கப்படுவதை சுட்டிக்காட்டுகின்றன. அந்தத் தளங்கள் தங்களை அணு குண்டு, ஹைட்ரஜன் குண்டுகளால் தாக்குவதற்காகவே உள்ளன என்பதை சுட்டிக் காட்டுகின்றன" என்று எழுதுகிறார். இவ்வித ராணுவ தளங்கள் இருப்பது உள்ளங்கை நெல்லிக்கனி போன்ற உண்மை.

அமெரிக்க ராணுவ தளகர்த்தர்களும் அரசியல்வாதிகளும் எவ்விதம் சோவியத் யூனியனையும் சீனாவையும் தாக்குவது என்பது பற்றி நடந்துவரும் விவாதம் நேருவுக்கு தெரியாமலிருக்க முடியாது. அந்த நாடுகளுக்கு எதிராக யுத்தம் தொடுக்க மக்களைத் திரட்ட செய்யப்படும் யுத்த வெறிப் பிரசாரம் நேருவிற்குத் தெரியாமலிருக்க முடியாது.

இவ்வித யுத்த வெறிப் பிரசாரத்தை ஆரம்பித்து வைத்தவர் சர்ச்சில்தான். அமெரிக்காவிலுள்ள புல்டன் என்னுமிடத்தில் சர்ச்சில் சோவியத் யூனியனுக்கு எதிராக யுத்தம் தொடுக்க வேண்டுமென்று முன்னர் பேசிய அந்த சந்தி சிரித்த பேச்சை உலகமறியும்.

இங்ஙனம் ஏகாதிபத்திய வாதிகள்தான் கெடுபிடி யுத்தத்தைத் துவக்கி வைத்தவர்கள். சோவியத் யூனியனுக்கும் மக்கள் ஜனநாயகங்களுக்கும் எதிராக வியாபார பகிஷ்காரத்தைத் துவக்கியவர்களும் ஏகாதிபத்தியப் பிண்டங்கள்தான்.

(அடுத்த இதழில் முடியும்.)

## ஆன்டன் ட்வாரக் மறைவு நாள்

செக்கோஸ்லாவாகிய புகழ் பெற்ற பாடகன் ஆன்டன்ட்வாரக்கின் 50வது மறைவு தினம் கொண்டாட சென்னை சமாதானக் கமிட்டியின் சார்பில் கலை ஊழியர்களின் கூட்டம் 18-7-54ல் கிரசன்ட் மண்டபத்தில் நடைபெற்றது. சென்னை பல்கலைக் கழக இசை இலாகா பேராசிரியர் சங்கீத கலாசிகாமணி திரு. பி. சாம்பமூர்த்தி கூட்டத்திற்கு தலைமை வகித்தார்.

பேராசிரியர் சாம்பமூர்த்தி, ட்வாரக்கிற்கு வணக்கம் செலுத்திவிட்டு அவர் ஐரோப்பிய இசைக்கு செய்துள்ள தொண்டை பாராட்டினார். அவருடைய கிராமிய இசை பற்றி சிலாகித்துவிட்டு அவர் இத்துறையில் தமிழ் இசை மன்னர் கோபாலகிருஷ்ண பாரதிக்கு ஒப்பாவார் என்று கூறினார். இசையின்மூலமாக சகல மக்களையும் ஒன்றுபடுத்தமுடியும். புகழ்மிக்க கலைஞர்களின் மறைவு தினங்களை கொண்டாட சமாதானக் கவுன்சில் எடுத்துவரும் முயற்சியை அவர் மிகவும் பாராட்டினார்.

ட்வாரக்கின் ஞாபகார்த்த விழாவை கொண்டாடச் செய்வதின் மூலம் உலக சமாதானக் கவுன்சில் பல்வேறு மக்களிடையும், பல்வேறு நாடுகளிடையும் கலாச்சார ஒற்றுமை ஏற்படுத்துவதற்கு பெரும் தொண்டாற்றியுள்ளது என்று திரு. கண்டசாலா பாராட்டினார். இந்தியாவின் மிகப்பெரிய இசைவேந்தரான தியாகராஜருடைய பேரையும் உலக மகா தலைவர்களின் பட்டியலில் சேர்க்க வேண்டும் என்று உலக சமாதானக் கவுன்சிலைக் கேட்டுக் கொள்ளவேண்டுமென்றார். திரு. கண்டசாலா சில பாடல் பாடி வந்திருந்தோரை மகிழ்வித்தார்.

சென்னை தமிழ் எழுத்தாளர் சங்க பொதுச்செயலாளர் திரு. பி. கோதண்டராமன், தெலுங்கு எழுத்தாளர் சங்க செயலாளர் டாக்டர். மல்லிகார்ஜுன ராவ், சென்னை கேரள சமாஜத் தலைவர் திரு. சி. ஆர். கிருஷ்ணபிள்ளை, கிரசன்ட் சொஸைடி செயலாளர் ஜனாப் எஸ். எம். பாசில் ஆகியோர் ட்வாரக்கின் வாழ்க்கை, தொண்டுபற்றி சொற்பொழிவாற்றினர்.

ஏராளமான கலை ஊழியர்கள் கூட்டத்திற்கு வந்திருந்தனர். சென்னை சமாதானக் கமிட்டி செயலாளர் திரு. வி. பரமேஸ்வரன் நன்றி கூறுகையில், இந்தியாவின் பெரும் கலைஞர்களைப் பற்றி இதர நாட்டு மக்களுக்கு தெரியப்படுத்த சமாதானக் கவுன்சில் நடவடிக்கை எடுக்கும் என்று கூறினார்.

## காரைக்குடியில் 3,000 பேர் அணிவகுப்பு

அரசியல் கைதிகளை விடுதலை செய்யக் கோரி 27-6-54 காரையில் 3,000 பேர் கொண்ட மாபெரும் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

கட்சியின் சார்பில் நடைபெற்ற இக் கூட்டத்திற்கு தோழர் பழ. கருப்பன் செட்டியார் தலைமை வகித்தார். தோழர்கள் ஆர். எச். நாதன், எ. சீனிவாசன், எஸ். உலகநாதன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

## நெல்லையில் மகஜர்

அரசியல் கைதிகளை விடுதலை செய்யக் கோரியும், தோழர் பால தண்டாயுதத்தை தமிழ்நாட்டுக்குக் கொண்டு வரவேண்டுமென்றும், சிங்கை மக்களால் பஞ்சாயத்து போர்டு தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்ட தோழர் மீனாட்சிநாதனை விடுதலை செய்யவேண்டுமென்றும் நெல்லையில் 928 கையெழுத்துக்களும், வள்ளியூரில் 250 கையெழுத்துக்களும் வாங்கி முதலமைச்சருக்கு அனுப்பப் பட்டுள்ளன.

# நிலஉடமைக்கு எல்லை வகுக்க

## திருச்சி விவசாயிகள் மாநாட்டின் கோரிக்கை

**'நில உடைமைகளின் உயர்ந்தபட்ச அளவு நிர்ணயிக்கப்படவேண்டும்; உடனடியாக நிலவெளியேற்றத்தை தடைசெய்யவேண்டும்; விவசாயிக்கு 75 சதம் வாரம் கிடைக்கவேண்டும். தரிசு நிலத்தை நிலமற்ற விவசாயிகளுக்குப் பகிர்ந்துகொடுக்கவேண்டும்' என்று ஜூலை 10, 11 தேதிகளில் பாப்பா குறிச்சி-காட்டூரில் நடைபெற்ற திருச்சி ஜில்லா விவசாயிகள் மகாநாடு கோஷித்தது.**

ஐந்து பேர் கொண்ட ஒரு நிலச் சுவான்தார் குடும்பத்திற்கு நஞ்சையாக இருந்தால் 10 ஏக்கரும், நஞ்சையாக (தோட்டக்கால்) இருந்தால் 20 ஏக்கரும் அனுமதித்துவிட்டு மீதி நிலங்களை விவசாயத் தொழிலாளர்களுக்கும், நிலமில்லா விவசாயிகளுக்கும் பகிர்ந்து கொடுக்கவேண்டுமென ஜில்லா மகாநாடு தீர்மானித்தது. கோவில் நிலங்களில் லல முறையையும், இடைத் தரகர் முறையையும் ரத்து செய்ய வேண்டுமென்றும் மகாநாடு கோரியது. காவேரி பாயும் பிரதேசங்களில், பண்ணையாட்களுக்கு மாதத்திற்கு மூன்று கலமும், விவசாயத் தொழிலாளர்களில் ஆணுக்கு தினக்கூலி 1-8-0-ம், பெண்ணுக்கு 1-2-0-ம், சிறுவருக்கு 0-14-0ம் தரவேண்டுமென்றும், ஆண், பெண் சம வேலைக்கு சம கூலி வேண்டுமென்றும், 8 மணி நேரத்திற்கு மேல் வேலை வாங்கக்கூடாதென்றும் தீர்மானிக்கப்பட்டது. மேட்டுப் பிரதேசங்களில் பிரதேச வாரியாக கூலி நிர்ணயம் செய்யப்படவேண்டும்.

ஜூலை 10ம் தேதி காலையில் ஆரம்பமான பிரதிநிதிகள் கூட்டத்திற்கு டாக்டர் சிற்றம்பலம் தலைமைவகித்தார். ஜில்லா காரியதரிசி தோழர் ராகவன் சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கையை நன்கு விவாதித்தபின்னர், பிரதிநிதிகள் ஏற்றுக்கொண்டனர்.

மறுநாள் ஜூலை 11ம் தேதி மாலையில் ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெற்றன. பாப்பா குறிச்சியிலிருந்து காட்டூர் மகாநாட்டு மேடைக்கு விவசாயி தலைவர்கள் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டார்கள். 500 பெண்கள் உட்பட 1500 விவசாயிகள் ஊர்வலத்தில் அணிதிரண்டுவந்தார்கள். அல்லூர், அந்த நல்லூர் முதலிய கிராமங்களிலிருந்துவந்த ஊர்வலங்களும் இந்த ஊர்வலத்தில் வந்துசேர்ந்தன.

அபிவிருத்தி வரியைக் கண்டித்தும், நிலவெளியேற்றத் தடுப்பு கோரியும், கடன் ஒத்திவைப்பு சட்டத்தை நீடிக்க வேண்டுமென்றும், நீர்ப்பாசனவசதி, விவசாயப் பொருள்கள் விலைவீழ்ச்சி முதலிய பல பிரச்னைகளைப் பற்றியும், அரசியல் கைதிகள் விடுதலை, உலக சமாதானம், முதலியனவற்றைப் பற்றியும் மொத்தம் 27 தீர்மானங்கள் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்டன.

திருச்சி ஜில்லாவின் சகல பாகங்களுக்கும் விவசாய இயக்கம் வேகமாகப் பரவிக் கொண்டிருப்பதற்கு எடுத்துக் காட்டாக இந்த மகாநாடு விளங்கியது. ஜில்லாவின் எட்டுத் தாலுக்காக்களிலிருந்தும் சுமார் ஐந்து பெண்கள் உட்பட 50 பிரதிநிதிகள் மகாநாட்டில் கலந்துகொண்டார்கள்.

மகாநாட்டின் பொதுக்கூட்டத்தில் 3000 பேர்கள் கலந்துகொண்டார்கள். டாக்டர் சிற்றம்பலம் தலைமை வகித்தார். வரவேற்புக் கமிட்டி காரியதரிசி டி. எஸ். வீரராகவன் சகலரையும் வரவேற்றுப் பேசிய பின், தொழிலாளர் தலைவர் ஆர். உமாநாதராவ் விவசாய சங்கக் கொடியேற்றி சொற்பொழிவாற்றினர். காம்பக்குடி விவசாயிகள் தலைவர் வி. சி. ராமையா ராங்கியர் மகாநாட்டைத் திறந்து வைத்தார். ஜில்லா காரியதரிசி தோழர் வி. நாகு, தோழர்கள் பாப்பா, எம். கல்யாணசுந்தரம் முதலியோர் சொற்பொழிவாற்றினர்கள். தோழர் கல்யாணம் தன்னுடைய பிரசங்கத்தில் நிலச்சீர்திருத்தத்தின் அவசியத்தை வற்புறுத்தினர். கூட்டத்தில் தோழர்கள் மூக்காயி, மோட்சம், சுந்தரராஜன் முதலியோர் புரட்சி பாடல்கள் பாடினர்கள்.

விவசாய சங்க ஜில்லா கமிட்டிக்குத் தலைவராக டாக்டர் சிற்றம்பலம், எம்.எல்.ஏ.யும், உப-தலைவர்களாக தோழர்கள் கே. ரங்கசாமியும், பா. அருணாசலமும், காரியதரிசியாக தோழர் நாகுவும், உதவிக் காரியதரிசியாக டி. எஸ். வீரராகவனும், மேலும் 10 பேர்கள் கமிட்டி உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். திண்டுக்கல்லில் நடைபெறப்போகும் மாகாண மகாநாட்டிற்கு 8 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.



## பாஸ்டீல் சிறை உடைபட்ட...

களும் தலைகாட்ட வில்லை முயற்சித்த சகலரும் செம்மையான கல்லடி பட்டு ஓட்டம் பிடித்தார்கள்.

அதன்மேல் வேறு வழியின்றி கவர்னர் (கமிஷனர்) மெனூர்டும் பிரஞ்சிந்திய ராணுவம் போலீஸ் இவற்றின் பிரதம அதிகாரியும் எல்லைக்கு வந்தார்கள். தாங்கள் மட்டும் வந்தால் எங்கு உதை விழுகிறதோ என்ற உதைப்பில் இந்திய யூனியன் கான்ஸல் ஜெனரலையும் அழைத்துவந்து போலீஸ் முகாம் மீது பறந்துகொண்டிருந்த இந்திய யூனியன் கொடியையும் அதன் அருகில் பறந்துகொண்டிருந்த மற்றொரு கொடியைமட்டும் அவிழ்த்துக்கொண்டு போய் விட்டார்கள். மற்றவை மக்களின் வெற்றிக்கு எடுத்துக்காட்டாய் இன்னும் பறந்துகொண்டிருக்கின்றன.

### வெள்ளை ராணுவ போலீஸ் குவியலையும் மீறி கவர்னர் மாளிகை முன் ஆர்ப்பாட்டம்

ஆயினும் ஜூலை 14ல் புதுவை மக்களின் விடுதலை ஆர்வ ஆர்ப்பாட்டத்துக்கு சிகரமாய் விளங்குவது அன்று மாலை கவர்னர் (பிரஞ்சிந்திய கமிஷனர்) மாளிகை முன்பு நடந்த சத்யாக்கிரகிகள் ஆர்ப்பாட்டம்தான்.

மாலை 3 மணி கவர்னர் மாளிகைக்கு எதிரேயிருந்த 'ப்ளாஸ் தெகோல', டூப்ளே சிலை, இங்கெல்லாம் பெருத்த ராணுவ போலீஸ் படைகுவிப்பு அவர்கள் அனைவரும் 'பிரஞ்சு கலையை நடுப்பகலில் பருகிவிட்ட போதையுடன் விளையாட்டுப் பந்தயங்களில் ஈடுபட்டுள்ளனர். சைகோன் குண்டர்கள் எனப் பேர்கொண்ட இந்தோ சீனப் போரில் மூக்குடைந்து ஓடிவரும் ரூரப் புலிகள் ஒருபுறம் பிரஞ்சுப் படைகள் ஒருபுறம். 'சுபான்' நகப்போலீஸ் கயவர்கள் ஒருபுறம். எங்கும் ஒரே படையினரின் முகாம்.

இத்தனைக்கும் மத்தியில் பிரஞ்சு ஏகாதிபத்யத்துக்கு எதிராக ஆர்ப்பாட்டம் செய்து தேசமக்களின் விடுதலை இணைப்பு இயக்ககோஷங்கள் கவர்னரின் மாளிகைக்கு எடுத்துச் செல்வதென தேசபக்த மாமணிகள் கிளம்பினர். நாட்டு மக்களின் விடுதலைப்போரின் நிச்சயமான வெற்றியின் பரணியை பாடிச் சென்ற இவ்வீரர்களின் வரிசையில் ஏப்ரல் 13ம் தேதி ஒதியஞ்சாலை மைதானத்தில் கொடியேற்றி வைத்ததற்காக கைது செய்யப்பட்டும், விழுப்புரம் சர்வகட்சி மகாநாட்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐக்கிய போராட்ட செயல் கமிட்டி உறுப்பினருமான தோழர் லெயோன் ரெமோன் தலைமையில் 40 சத்யாக்கிரகிகள் வெற்றிநடை போட்டு சென்றனர். பன்முறை சிறை சென்ற தேசபக்தர்கள், தோழர்கள். நாராயணசாமி பரிமளம், கோதண்டபாணி, வேதாசலம், சுப்ரமணி, சுப்புரத்தினம், விநாயகம், அண்ணாசாமி, நடராஜன், கிருஷ்ணராஜு, சாமிக் கண்ணு மற்றுமுள்ளோர் நின்றனர். பளாஸ் தெகோலிலிருந்து கவர்னர் மாளிகை வரை ஏகாதிபத்ய எதிர்ப்பு தேச விடுதலை இணைப்பியக்க கோஷங்கள் இடிமுழக்கம் செய்து வந்தனர். வேடிக்கையிலும் விளையாட்டிலும் மூழ்கிக்கிடந்தவர்கள் உட்பட பதினாயிரக் கணக்கான மக்களின் கண்களும் காதுகளும் கவர்னர் மாளிகை பக்கம் சத்யாக்கிரகிகள் பக்கம் திரும்பிவிட்டன. இத்தேசபக்த மாமணிகளின் நெஞ்சுரம் அனைவருக்கும் மனோ தைரியம் கொடுத்தது. சத்யாக்கிரகிகளை போலீஸ் தடுக்கிறது. சத்யாக்கிரகிகள் கவர்னர் மாளிகை எதிரில் உட்கார்ந்து விட்டார்கள். கோஷங்கள் கவர்னர் மாளிகையை கிடுகிடுக்க வைக்கின்றன. மக்களின் இதயத்தை கிறுகிறுக்க வைக்கின்றது. திடீரென சைகோன் குண்டர்களான மிலித்தேர்கள் சத்தியாக்கிரகிகள் மீது பாய்ந்து தடியாலும் துப்பாக்கிக் கட்டையாலும் தாக்குகிறார்கள். அப்படித்தானே! அடக்குமுறை ஆட்சி ஒழிக! என்று கூடியிருந்த ஆண் பெண்கள் அனைவரும் மூலைக்கு மூலை கோஷம் கொடுக்கிறார்கள். துறைமுகத்தில் சர்க்கார் உத்தியோகம் செய்யும் விவேகானந்தனை போலீஸ் சைகோன் நாய் ஒன்று அணுகி சத்தியாக்கிரகிகளை அடித்தால் என்ன செய்துவிடுவாய் என்று மிரட்டுகிறது. அடித்துப் பார்! விவேகாவும் மக்களும் கர்ஜிக்கிறார்கள். வெறி கொண்டு நிதானம் இழந்த நாய் அடிக்கப் போகிறது சத்தியாக்கிரகிகளை. விவேகா அந்த நாயின் கையைப் பிடித்து இழுத்துத் தள்ளுகிறார். வேண்டுமானால் என்னை அடி என்கிறார். நாய்கள் அனைத்தும் பாய்கின்றன. மக்களின் கோபக் கனல் ஜுவாலை விட்டெரிகிறது. வெள்ளை ராணுவ வெறியர்கள் தூண்டி நடத்தும் சைகோன் குண்டர்களின் தாக்குதல்கள் விவேகா, பரிமளம் மற்றுமுள்ள தோழர்கள் ரத்தத்தைச் சிந்துகிறது. விவேகா மண்டை பிளந்து வருகிறது. ஆலமரங்கள் அடிசாய்ந்துவிட்டனவோ? விவேக் பரிமளம் மூர்ச்சித்துவிடுகிறார்கள். அவர்களின் கோஷங்களை மக்கள் எடுத்துக்கொண்டு விட்டார்கள். நாய்கள் மக்கள்மேல்பாய்கின்றன. பலருக்குப் படுகாயம். இரண்டு பெண் மணிகள் கைக் குழந்தையுடன் மூர்ச்சித்துவிடுகிறார்கள்.

### அனைவரும் போராட்டச் செயல் கமிட்டியுடன் ஒன்று சேர்ந்தால்

ராணுவ போலீஸ் தடிக்கு மக்கள் பயந்து ஓடின காலம் மலையேறிவிட்டது. மக்கள் கையிலோ எந்தவித ஆயுதமும் இல்லை. தார் ரோடு - கற்களும் இல்லை. இருப்பினும் போலீஸ் தடிகளை மக்கள் பிடுங்கப் பார்க்கிறார்கள். தடியை ஓங்குவதற்கும் இடைவெளி இல்லை போலீஸ் ராணுவ நாய்களுக்கு. அதன்மேல் சத்தியாக்கிரகிகளைப் போலீஸ் தலைமை காரியாலயத்துக்கு இழுத்துக் கொண்டு போகிறார்கள். விவேக் மூர்ச்சையாகிக் கிடக்கிறார். மனித இதயமற்ற பிரஞ்சு போலீஸ் ராணுவ நாய்கள் தலை சாய்ந்து விட்ட தோழர் விவேகானந்தனை தாதாவென்று தரையில் இழுத்துச் செல்கிறார்கள். இத்தனை போலீஸ் வெறியாட்டத்துக்கும் அஞ்சாத பார்வையாளர்களில் ஒருவர் வீரத்தனமாக முன் வந்து விவேகானந்தனை தான் தூக்கி வருவதாகச் சொல்லி அவர்கள், மிருகத்தனத்தை சுட்டிக் காட்டி தூக்கிப் போகிறார். நாய்களுக்கு நல்ல புத்திவரவில்லை. அவரையும் தாக்குகிறார்கள். ஆயினும் அவர் தூக்கிக்கொண்டு போகிறார். புதுவை மக்களின் நெஞ்சுறுதிக்கும் கடமை உணர்ச்சிக்கும் ஒரு எடுத்துக் காட்டாக விளங்குகிறார்.

ஆக பஸ்தீல் தினத்தில் பிரஞ்சிந்திய மக்களின் தேச விடுதலை இயக்கம் புதிய ஒரு கட்டத்தை அடைந்தது. மக்களின் அடிவயிற்றிலிருந்து அன்னிய ஆட்சிக்கு எதிரான ஆவேசத்தை உண்டாக்கி அச்சத்தை போக்கியுள்ளது.

விவேக்கின் உடைந்த மண்டை பரிமளத்தின் நைந்த உடல், சத்தியாக்கிரகி எலக்ட்ரிக் நாராயணசாமி, பழனி, கோபால்சாமி, வேதாசலம், சுப்ரமணியம், சுப்புரத்னம், விநாயகம், அண்ணாசாமி, நடேசன் முதலியோரின் உடல் காயங்கள் இவைகளிலிருந்து சிந்திய கவர்னர் மாளிகை வாசற்படியை நனைத்து வைத்துள்ள தூய தேசபக்த ரத்தம் இந்த நாள். நம் மக்களின் தேசபக்த உணர்வை ஞாபகப்படுத்தி நிற்கும் - பிரஞ்சு ஏகாதிபத்தியம் பிரஞ்சிந்திய மக்களின் இணைப்பியக்கப் பிரச்னையை சுமுகமாகத் தீர்ப்பதற்கு தயார். மறுபடியும் பேச்சுவார்த்தை ஆரம்பிப்போம் எனச் சொல்வதெல்லாம் வெறும் மோசடி என்பதை அம்பலப்படுத்தி நிற்கிறது. பல கட்சிகளின் ஒன்றுபட்ட போராட்ட செயல் கமிட்டி மக்களை எவ்வளவு தியாகத்துக்கும் நெஞ்சுறுதிக்கும் தட்டிவிடும் என்பதை எடுத்துக்காட்டிகிற்கிறது. போராட்டக் கமிட்டியில் சேர்ந்து நிற்போர், தனித்து நிற்கும் மற்ற தேசபக்த ஸ்தாபனங்கள், கட்சிகள், தனிநபர்கள் அனைத்தும் ஒன்று திரண்டு அறைகூவினால் நம் மக்கள் தம் இறுதிப்போரை துரிதமான வெற்றிக்கு நடத்திச்செல்ல முடியும் என்பதை அறிவுறுத்துகிறது.

### நாமக்கல் தாலுக்கா

## கடன் ஒத்திவைப்பு மகாநாடு

காளப்பநாய்க்கன்பட்டியில் 12-7-54ம் தேதியன்று நடைபெற்ற நாமக்கல் தாலுக்கா விவசாய சங்க முக்கியஸ்தர் கூட்டத்தில், ஆகஸ்டு முதல் தேதியன்று தாலுக்கா கடன் ஒத்திவைப்பு மகாநாட்டை நாமக்கல்லில் நடத்துவதென முடிவு செய்யப்பட்டது. தோழர்கள் முத்துசாமி உடையாரை தலைவராகவும், கே. வி. ராமசாமி, எம். எல். ஏ.-யைக் காரியதரிசியாகவும் கொண்ட வரவேற்புக் கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது.

# கடன் ஒத்திவைப்பு சட்டம 4 வருஷத்துக்கு நீடிக்கவும்!

## லக்ஷம் ஏக்கர் தரிசுநிலத்தை ஏழைகளுக்குப் பங்கிடு

### கோவை ஜில்லா விவசாய மகாநாட்டின் கோரிக்கை

பெண்களும் மகாநாட்டிலே

கோவை ஜில்லா விவசாயிகள் முதல் மகாநாடு ஜூலை 10, 11 தேதிகளில் பேரூரில் என். கே. பழனிசாமி எம்.எல்.ஏ. தலைமையில் நடைபெற்றது. 10ந் தேதி அதிகாலையிலேயே ஜக்கார் பாளையம், நீலம்பூர், நாராயண நாயக்கன் புதூர், வீதம்பட்டி காட்டம்பட்டி, வாகரையாம்பாளையம் போன்ற நெடுந்தூர ஊர்களிலிருந்து விவசாயிகள் அலங்கரிக்கப்பட்ட வண்டிகளிலும் கால்நடையாகவும் கோவையை அடைந்தபொழுது நகர எல்லையில் தொழிலாளிகளால் வரவேற்கப்பட்டனர். வேலூர், ஜக்கார் பாளையத்திலிருந்து சுமார் ஐம்பது விவசாயத் தொழிலாளிகள் தாரை தப்பட்டைகளுடன் கால்நடையாக வழிநெடுகப் பிரசாரம் செய்து கொண்டு வந்தனர். தெனமநல்லூர் விவசாயிகளும் அதே போல் புலிவேஷம், ஆடல் பாடல்களுடன் அணிவகுத்து வந்தனர்.

மகாநாடு நடப்பதற்கு முந்தின நாள் மாலை முதல் அன்று காலை 10 மணி வரை கோவை, பீளமேடு, சிங்காநல்லூர், மதுக்கரை ஆகிய இடங்களிலும் இவற்றைச் சுற்றி 5 மைல் வட்டாரத்திலும் போலீஸ் லாரிகள் ஒலிபெருக்கியுடன் சென்று வீதி வீதியாக 4 பேருக்கு மேல் கூடக்கூடாதென்ற சட்டம் பிறப்பிக்கப்பட்டதை அறிவித்து மக்களைக் குழப்ப முயன்றன. இருந்தாலும் மகாநாடு தடையின்றி நடக்கிறதென்ற விஷயம் தெரிந்தவுடன் பிற்பகலில் விவசாயிகள் வந்து குழுமினர்.

கோவை ஜில்லா விவசாயிகள் இயக்க சரித்திரத்திலேயே இது தான் முதல் மகாநாடாகும். இதற்கு முன்னால் பழைய கோட்டை பட்டாக்காரர் தலைமையிலுள்ள நிலப்பிரபுக்கள் சங்கம் தான் ஜில்லா விவசாயிகள் மகாநாடு என்ற பெயரில் மகாநாடுகளை நடத்தியுள்ளது.

விசேஷமாக அமைக்கப்பட்ட பந்தலில் மகாநாடு நடைபெற்றது. 10ந் தேதி காலை தோழர் மணலி கந்தசாமி கொடியேற்றி வைத்தபின் திரு. எஸ். பி. ஆதித்தன் சோவியத், சீன, இதர ஜனநாயக நாடுகளில் விவசாய முறைகள், வாழ்க்கை நிலைமைகளை விளக்கும் படக் காட்சியைத் திறந்துவைத்தார்.

ஆயிரக்கணக்கில் அணி திரண்ட கோவை ஜில்லா விவசாயிகள்

தோழர் ஏ. எம். நடராஜன் அனைவரையும் வரவேற்ற பின்னர் தோழர் மணலி தமது கொடியேற்று விழாப் பிரசங்கத்தையும், திரு. எஸ். பி. ஆதித்தன் தமது படக்காட்சித் திறப்பு விழாப் பிரசங்கத்தையும் நிகழ்த்தினார்கள்.

கோவை நகரில் விவசாயிகள் ஊர்வலம்

#### தரிசுநிலம் வேண்டும்

பிற்பகல் நிகழ்ச்சிகள் தோழர். பி. ஸ்ரீனிவாச ராவ் அவர்களின் திறப்புரையுடன் தொடங்கின. அவர், "தரிசு நிலங்களை உடனடியாக விவசாயிகளுக்குப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும், இல்லாவிட்டால் விவசாயிகள் தாங்களாகவே நிலத்தை எடுத்துக்கொண்டு சாகுபடி செய்வார்கள்" என்று கூறிய பொழுது கூடியிருந்த அனைவரும் பலத்த கரகோஷத்துடன் ஆமோதித்தனர். பின்னர் தோழர் என். கே. பழனிசாமி தமது தலைமையுரையை நிகழ்த்தினார். ஜில்லா சங்கக் காரியதரிசி தோழர் எஸ். துரைசாமி அறிக்கையை சமர்ப்பித்தார்.

#### சர்வதேச வாழ்த்துகள்

உலக தொழிற்சங்க சம்மேளனத்தின் பகுதியான சர்வதேச விவசாய தொழிற்சங்க சம்மேளனம், இலங்கை விவசாய தொழிலாளர் சம்மேளனம், இதர சகோதர ஸ்தாபனங்கள், பிரமுகர்களிடமிருந்து வந்திருந்த வாழ்த்துச் செய்திகளை தோழர் ஏ. எம். நடராஜன் படித்தார். தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ், சிமெண்ட் தொழிலாளர் சங்கம், சேலம் ஜில்லா விவசாயிகள் சங்கம் ஆகியவற்றின் சார்பில் முறையே தோழர்கள் கே. ரமணி, கே. ஆர். ராமசாமி, எஸ். பச்சமுத்து ஆகியோர் வாழ்த்துகளைத் தெரிவித்தனர்.

இரவு கலா நிகழ்ச்சிகள் நடைபெற்றன. மயிலாட்டம், ஒயில் கும்மி, கத்தி, சிலம்பு விளையாட்டுகள், உழவன்குரல், குறவன் குறத்தி நாடகங்கள் முதலியவை நடந்தன.

#### விவசாய சங்க கவுன்ஸில்

11ந் தேதி ஞாயிறு காலை மீண்டும் தீர்மானங்களின்மீது விவாதம் நடந்தது. பின்னர் 51 பேர் கொண்ட ஜில்லா விவசாயி சங்க கவுன்சில் தேர்ந்தெடுக்கப்பட்டது. புதிய வருஷத்திற்கு என். கே. பழனிசாமி, எம். எல். ஏ. தலைவராகவும், என். வி. நாகசாமி நாயுடு, என். கருப்பண்ணன் இருவரையும் உப-தலைவர்களாகவும், எஸ். துரைசாமி காரியதரிசியாகவும், ஏ, எம். நடராஜனையும், கே. ராமகிருஷ்ணனையும் உதவிக் காரியதரிசிகளாகவும், பி. கே. ராமசாமி, வி. ஆர். கிருஷ்ணன். எல். பழனிசாமி, ஐ. உசேன், என். சாமு, சி. ராமசாமி, சீரங்கன், கே. எஸ். நாச்சிமுத்து, எஸ். எம். மாரப்பன் ஆகியோரை அங்கத்தினராகவும் கொண்ட நிர்வாகக் கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது. மாகாண மகாநாட்டிற்கு[ 34 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பிற்பகல் ஊர்வலம் நடைபெற்றது. போலீஸ் சட்டம் 30வது பிரிவின்படி 4 பேருக்கு மேல் கூடக்கூடாதென்று தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்ததால் ஊர்வலம் நடத்த அனுமதிகோரி விண்ணப்பிக்கப்பட்டிருந்தது. கடைசி நிமிஷத்தில்தான் அனுமதி கொடுக்கப்பட்டது. அதிலும் வண்டிகள் ஊர்வலம் நடத்த அனுமதி கோரி விண்ணப்பிக்கப்பட்டிருந்தது. கடைசி நிமிஷத்தில் தான் அனுமதி கொடுக்கப்பட்டது. அதிலும் வண்டிகள் ஊர்வலம் மட்டும் தனியாகச் சென்றது.

மாலை சிதம்பரம் பூங்காவில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் என். கே. பழனிச்சாமி, மணலி, ஜீவா, கே. டி. ராஜு ஆகியோர் பேசினார்கள்.

#### தீர்மானங்களின் சாரம்

1. தியாகிகளுக்கு வணக்கம், 2. அரசியல் கைதிகள் விடுதலை, 3. பிரஞ்சிந்தியப் போராட்டத்திற்கு ஆதரவு, 4. இந்திய-சீனப் பிரதமர்களின் கூட்டறிக்கையை வரவேற்று, அதிலுள்ள, 5. கொள்கைகளின் அடிப்படையில் தகராறுகளைத் தீர்த்துக்கொள்ளும்படி, 6. இலங்கை-இந்தியர் போராட்டம் பற்றி, 7. தமிழ் மொழியில் அரசாங்க அலுவல்கள் நடத்தும் படியும்,

8. கடன் ஒத்திவைப்புச் சட்டத்தை மேலும் நான்கு வருடங்களுக்கு நீடிக்கவேண்டும். விவசாயிகளுக்குச் சுலபமாகக் கடன் கிடைக்க வழிசெய்ய வேண்டும்.

9. விவசாயத் தொழிலாளிகளுக்கு நிவாரணம் தர உடனடி நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும். குளம், குட்டை, ரோடு மராமத்து ஆகியவற்றின் மூலம் வேலைதர வேண்டும். ஜில்லாவில் உள்ள சாகுபடிக்கு லாயக்குள்ள 12 லட்சம் ஏகர் தரிசு நிலத்தை உடனடியாக விவசாயிகளுக்குப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும்.

10. நிலவெளியேற்றத் தடுப்புச் சட்டத்தை கோவைக்கும் விஸ்தரிக்கவேண்டும், குத்தகையைக் குறைக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

11. பருத்தி, கரும்பு, நிலக்கடலை முதலிய பொருள்களுக்கு நியாய விலை உத்தரவாதம் கிடைக்கச் செய்யவேண்டும்.

12. பவானிசாகர் திட்டத்தின் கீழ் பாசனம் பெறும் நிலங்களுக்கு அபிவிருத்தி வரி விதிப்பதை 5 வருஷத்திற்கு ஒத்திவைக்கவேண்டும். முதல் 5 ஏகருக்கு அபிவிருத்தி வரியிலிருந்து விலக்களிக்கவேண்டும். ஏருக்கு 50 ரூபாய்க்குமேல் வரி விதிக்கப்படக்கூடாது.

13. எஸ். பி. சி. ஏ. (புண்ணுக் கழுத்து டிபார்ட்மெண்ட்) ஒழிக்கப்பட்டு, கால் நடை ஆஸ்பத்திரிகளை அதிகப்படுத்தவேண்டும்.

## ஓ விவசாயி...!

(ஆயிதீவாலி—என்ற ரத்தன் மெட்டு)

(செங்குறுதி)

ஓ விவசாயி!.......ஓ விவசாயி!
உழுது உழுது தேய்ந்து போகிறாய்—ஊண்
உடையுமின்றி அழுது சாகிறாய் (ஓ விவ)

தொழுது தொழுது வயிற்றுக்காக
துவண்டு துவண்டு மடிகிறாய்
பொழுதும் வயலில் உழுது இரவில்
புழுவைப்போல துடிக்கிறாய்
பாரியங்க பணி புரிபவனே—உலகை
பாட்டினாலே ஓட்டி செல்பவனே (ஓ விவ)

மண்ணை வெட்டி பரப்படித்து
மாடுபோல் உழைக்கிறாய்
கண்ணைப் பிழிந்து நீர்வடித்து
கன்னலுக்குப் பாய்ச்சுராய்
உன்னைப் புகழ யாருமில்லையே—உலகில்
உறுதி கொள்ள எவரும் வல்லையே (ஓ விவ)

அடித்த நெல்லைக் களத்திலேயே
அளந்து ஒருவன் செல்லவே
துடிதுடித்து ஏங்கி நீயும்
துயரத்தோடு நில்லவே
கொடுமை செய்யும் கூட்டம் ஒழியவே
—உனது உழைப்பை
கொண்டு செல்லும் கும்பல் அழியவே (ஓ விவ)

பிள்ளை குட்டி மனைவியோடு
அல்லும் பகலும் உழைக்கிறாய்
அள்ளிப்போகும் அவனைக்கண்டு
துள்ளி பயந்து நிற்கிறாய்
புரட்சி செய்ய கையுயர்த்துவாய்
—தஞ்சையைப்போல்
புதிய சட்டம் நீயும் கொள்ளுவாய் (ஓ விவ)

தங்கம் ஈயும் ஏழை உழவா
தனிமையாயிராது நீ
சங்கம் வைத்து ஒன்று சேர்ந்து
சடுதியாக மீளுவாய்
தொழிலனோடு ஒன்று சேருவாய்
—உனது வாழ்வின்
துயரமதனை இன்று போக்குவாய்! (ஓ விவ)

## த. வி. ச. நிர்வாகக் கமிட்டிக் கூட்டம்

ஜூலை 30, 31, ஆகஸ்டு 1 தேதிகளில் திண்டுக்கல்லில் நடைபெறப் போகும் தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் ஆறுவது மகாநாட்டில் சமர்ப்பிக்கப்படவிருக்கும் பொதுக் காரியதரிசியின் அறிக்கையையும், தீர்மானங்களையும் பரிசீலிப்பதற்காக இம்மாதம் 26ம் தேதியிலிருந்து 29ம் தேதி வரை த. நா. வி. சங்க நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் திண்டுக் கல்லில் நடைபெறும். கமிட்டி உறுப்பினர்கள் தவறாது கூட்டத்தில் கலந்துகொள்ள வேண்டுமென கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள்.

பி. ஸ்ரீனிவாச ராவ்,
பொதுக் காரியதரிசி,
தமிழ்நாடு விவசாயிகள் சங்கம்.

## சத்தியமங்கலம் விவசாயிகள் மாநாடு

பவானிசாகர் நீர் பாயும் பிரதேசங்களில் சர்க்கார் அனுஷ்டிக்கும் வரிக்கொள்கையையும், அபிவிருத்தி வரியையும் கோயம்புத்தூர் ஜில்லா சத்தியமங்கலம் வட்டார விவசாயிகள் முதல் மகாநாடு வன்மையாகக் கண்டித்தது.

ஜூலை 8-ம் தேதி நடைபெற்ற இம்மகாநாட்டில் தாலுக்கா விவசாய சங்கக் காரியதரிசி தோழர் கருப்பண்ணன் கொடியேற்றினார். ஈரோடு தாலுக்கா ஆர்கனைசரான தோழர் கே. எஸ். நாச்சிமுத்து மகாநாட்டைத் திறந்துவைத்தார். வட்டார விவசாய சங்க ஆர்கனைசரான தோழர் எஸ். எம். மாரப்பன் தலைமை தாங்கினார்.

அன்று மாலை கிராம வாத்தியங்கள் முழங்க, விவசாய மக்களின் உரிமை கோஷங்கள் அதிர, அலங்கரிக்கப்பட்ட மாட்டு வண்டிகளுடன் பெரும் ஊர்வலம் நடைபெற்றது. தோழர்கள் கே. டி. ராஜுவும், மணலி கந்தசாமியும், சொற்பொழிவாற்றிய பின், கலா நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

## விவசாய சங்கத் திறப்பு விழா

மதுரை ஜில்லா மேலூர் தாலுக்காவைச் சேர்ந்த வடக்கு வலையபட்டி கிராமத்தில் 27-6-54ல் விவசாய சங்கம் அமைக்கப்பட்டது. சங்கத்திற்கு தோழர்கள் ரா. அழகன் தலைவராகவும், சி. பிச்சை உப-தலைவராகவும், க. பி. ராமன் காரியதரிசிகளாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

# தொழிலாளர் அப்பீல் கோர்ட்

## எப்படி நடைபெறுகிறது?

சென்னை, வேப்பேரி, ஹண்டர்ஸ் ரோட்டிலுள்ள வட்டார லேபர் கமிஷனர் அலுவலகத்தில் இரு நீதிபதிகளான எம். வாலியுல்லா, பிரசாத்தைக் கொண்ட தொழிலாளர் அப்பீல் நீதி மன்றம் (Labour appellate Court) 19-7-54 முதல் விசாரணை நடத்தி வருகிறது. இந்த விசாரணை சென்னையில் ஒரு மாதத்திற்குத் தொடர்ந்து நடைபெறும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. லேபர் அப்பீல் நீதி மன்றம் அமைப்பு, அதன் வேலை முறைகளைப் பற்றி இக்கட்டுரையில் சுருக்கமாகக் கூற விரும்புகிறேன்.

வேலை நிறுத்தம் செய்வதற்கு சில தடைகளை விதித்த போதிலும், கட்டாய விசாரணைக் கோர்டிற்கோ, தொழில் நீதி மன்றத்திற்கோ விசாரணைக்கு விடுவதற்கு 1929-வது ஆண்டு தொழில் தகராறு சட்டம் (Trade disputes Act) வழி செய்யவில்லை. யுத்த காலத்தில் தான் கட்டாய விசாரணை கோர்ட் தொழில் நீதி மன்ற முறை இந்திய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது. யுத்த பிற்காலத்தில் தொழிற்சாலை தகராறு சட்டம் (Industrial disputes Act) 1947ல் நிறைவேற்றப்பட்டு அந்த சட்டத்தின் கீழ் தொழில் கோர்டுகள் (டிரிபூனல்கள்) நாடு பூராவும் நியமிக்கப்பட்டன.

### நம் ராஜ்யத்தில் 3 தொழில் நீதி மன்றங்கள்

சென்னை ராஜ்யத்தில் 3 நிரந்தர தொழில் கோர்டுகள் உள்ளன. ஒன்று சென்னையிலும், இரண்டாவது மதுரையிலும், மூன்ருவது கோவையிலும் இருக்கின்றன. இவை மட்டுமல்லாமல் விசேஷ கோர்டுகள் அவசியம் ஏற்படும் போது நியமிக்கப்படுகிறது. பிம்சன், டிராம்வே, பஞ்சாலை தோட்டத் தொழில்கள், இது போன்றவற்றில் நியமிக்கப்பட்ட விசேஷ டிரிபுனல்கள் சமீபத்திய உதாரணங்கள். தோட்டத் தொழில் டிரிபூனல் இன்னும் தொடர்ந்து வேலை செய்து வருகிறது. 1948க்குப் பிறகு சகல ராஜ்யங்களிலும் ஏற்பட்ட பல தகராறுகள் தொழில் நீதி மன்ற விசாரணைக்கு விடப்பட்டு தீர்ப்புகள் கெஜட்டிலும், லேபர் லா-ஜர்னலிலும் பிரசுரிக்கப்பட்டுள்ளன. தொழிற்சாலை தகராறு சட்டத்தின்கீழ் (Industrial Disputes Act) அப்பீல் செய்வதற்கு வசதி கிடையாது.

தொழிற்சாலை தகராறு (அப்பீல்) டிரிபுனல் சட்டம் 1950 மேயில் நிறைவேற்றப்பட்டது. ஏராளமாக உள்ள தொழில் நீதி மன்றங்களின் நடவடிக்கைகளை இணைக்க ஒரு மத்திய அப்பீல் அமைப்பு அவசியம் என்று மத்திய சர்க்கார் அச்சட்டத்தின் காரணம், நோக்கம்பற்றிய அறிக்கையில் கூறியுள்ளது. லாபத்தை பகிர்ந்துகொள்வது, ரிடையர் ஆகும்போது கிடைக்கவேண்டிய உரிமைகள் இதுபோன்ற முக்கிய பிரச்னைகளில் சில தொழில்நீதி மன்றங்கள் மாறுபட்ட கருத்துக்களை தெரிவித்துள்ளன. பல்வேறு ராஜ்யங்களில் கிளைகளை வைத்திருக்கும் தொழில் ஸ்தாபனங்கள் சம்பந்தமாக வித்தியாசப்பட்ட தீர்ப்புகள் அளிக்கப்பட்டுள்ளன. ஆகவே தொழிற்சாலை தகராறு சட்டத்தில் சில மாறுதல்களை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

### லேபர் அப்பீல் நீதிமன்ற அமைப்பு

லேபர் அப்பீல் நீதிமன்றத்தின் தலைமைக் காரியாலயம் லட்சுமணபுரியில் இருக்குமென்றும், அதனுடன் தொடர்புகொள்ள சகல கடிதப் போக்குவரத்துக்களையும் பதிவு அதிகாரி, லேபர் அப்பீல் நீதி மன்றம், வாஜீர் மன்ஜில், வஜீர்ஹாசன் ரோடு, லட்சுமணபுரி என்ற முகவரிக்கு அனுப்பவேண்டும் என்றும் மத்திய சர்க்கார் தீர்மானம் செய்தது. லே. அ. நீதி மன்றத்தின் நீதிபதியாயிருப்பவரின் தகுதி என்னவென்ருல் அவர் ஒரு உயர்நீதிமன்ற நீதிபதியாகவோ, தொழில் நீதிமன்றத்தில் பல ஆண்டு அனுபவம் பெற்றவராக இருக்கவேண்டும். அவர்களில் ஒருவர் தலைவராய் இருப்பார். இரண்டு நீதிபதிகள் கொண்ட நீதிமன்றம் பல்வேறு மாகாணங்களுக்குச் சென்று விசாரணை நடத்தும். தற்போது பம்பாயிலும், கல்கத்தாவிலும் இம்மாதிரி நிரந்தர நீதிமன்றங்கள் இருக்கின்றன லட்சுமணபுரி நீதி

**கே. டி. கே.**

மன்றம்தான் அப்போதைக்கப்போது சென்னை வருகிறது. அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசின் தமிழ்நாடு கமிட்டியின் 4வது மகாநாடு அப்பீல் வழக்குகளை சீக்கிரமாகத் தீர்க்க சென்னையிலும் ஒரு நிரந்தர லேபர் அப்பீல் நீதிமன்றம் அமைக்கப்பட வேண்டும் என்று கோரியுள்ளது

அப்பீல் மனுவை தாக்கல்செய்யவும் நிறுத்திவைப்பு உத்தரவு (Stay-order)போன்ற இடைக்கால மனுக்கள் (Inter locutory applications) தாக்கல்செய்யவும் ஒவ்வொருவரும் மத்திய சர்க்கார் 1951 அக்டோபரில் வெளியிட்டுள்ள விதிகளை நன்ருகப் புரிந்து கொள்ளவேண்டும். லே. அ. தொ. நீதி மன்றத்திற்கு அப்பீல் செய்து கொள்பவர் 'பாரம் ஏ' வாங்கி அதில் கையொப்பமிட்டு அனுப்ப வேண்டும். அப்பீல் யாதாஸ்துடன் கூடவே தீர்ப்பு வெளியாகியுள்ள கெஜட் பிரதியும் வைத்து அனுப்ப வேண்டும். எத்தனை பிரதி பிரதிவாதிகள் இருக்கின்றனரோ அத்தனை பேருக்கும் ஒவ்வொன்று வீதம் நகல்களும் இதுதவிர மூன்று நகல்களும் லட்சுமணபுரிக்கு அனுப்ப வேண்டும். உதாரணமாக இரண்டு பிரதிவாதிகள் இருந்தால் அப்பீல் யாதாஸ்து 5ம் தீர்ப்பு நகல் 5ம் அனுப்ப வேண்டும். இவை ரிஜிஸ்டர் தபாலில் அனுப்பப்பட வேண்டும். மணி ஆர்டர் மூலம் ரூ 25 கட்டணமும் அனுப்பப்பட வேண்டும்.

### இடைக்கால மனு

இடைக்கால மனு (Interlocutory applioation) தாக்கல் செய்ய வேண்டுமானல், உதாரணமாக அனுமதியில்லாமல் வேலையை விட்டு நீக்கியது, சஸ்பெண்ட் செய்தது பற்றி 23வது பிரிவின் கீழ் நிறுத்திவைப்பு உத்தரவு வாங்க வேண்டுமானலோ தற்காலிக மனுவுடன் வக்காலத்து (affidavit) அனுப்ப வேண்டும். வக்காலத்து மனுவில் 1 ரூபாய் கோர்ட் ஸ்டாம்பு ஒட்டப்பட வேண்டும். 23வது பிரிவின்கீழ் தாக்கல் செய்யப்படும் வக்காலத்து சகல விபரங்களும் அடங்கியதாக இருக்க வேண்டும். ஏனெனில் விசாரணை சமயத்தில் இது தவிர வேறு ரிகார்டுகள் கிடையாது. எதிர்தரப்புதார் வக்காலத்து தாக்கல் செய்திருந்தால் நாம் எதிர் வக்காலத்து (counter affidavit) தாக்கல் செய்யவேண்டும். அனுப்பப்பட வேண்டிய நகல்களின் எண்ணிக்கை ஏற்கெனவே குறிப்பிட்ட விதியின்படியே. அப்பீல் விசாரணை சமயத்தில் ஏற்கெனவே விசாரிக்கப்பட்ட சாட்சிகளின் வாக்குமூலங்களையோ, சாட்சியங்களையோ (Exhibits) கவனிக்கப்பட வேண்டுமென்று நாம் விரும்பினல் கோர்டுக்கு முன்கூட்டியே அவைகளின் நகல்கள் 4 எடுத்து அனுப்பவேண்டும்.

எதிர்தரப்புதாருக்கு முன்கூட்டியே நகலை அனுப்பிவிட்டு நீதி மன்றத்திற்கு தெரிவிப்பது மிகவும் நல்லது. பொதுவாக நீதிபதிகள் உத்தரவை அப்போதே எழுதிக் கொடுத்து விடுவார்கள். உத்தரவை பிறப்பிக்கும்போது நாம் நீதி மன்றத்தில் இருக்கலாம். இவ்வுத்தரவுகள் போர்ட் சென்ட் ஜார்ஜ் கெஜட்டில் பகுதி 1-ன் அனுபந்தமாக வெளியிடப்படும்.

தற்சமயம் சென்னையில் நடைபெற்று வரும் லே. அ. தொ. நீதி மன்ற விசாரணையில் அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸ் சங்கங்களின் சார்பாக மோஹன் குமாரமங்கலம், வி. வெங்கடராமன், கே. டி. கே. தங்கமணி, எ. எஸ். கே. ஐயங்கார், எஸ். கிருஷ்ணமூர்த்தி, மலபார் கே. கிருஷ்ணன், தென் கன்னடத்தைச் சேர்ந்த சாந்தாராம்பாய், ராமநாதபுரம் சுந்தரம் ஆகியோர் வாதாடுகின்றனர்.

### பஞ்சாலை நஷ்டஈடு பிரச்னை!

பஞ்சாலைத் தொழிலாளிகளின் நஷ்டஈடு பிரச்னை சம்பந்தமாக விசேஷ நீதிமன்ற நீதிபதி கே. சீனிவாசன் அளித்த தீர்ப்பு பற்றிய நிறுத்தி வைப்பு மனு விசாரணை இதன் முன்னுள்ள முக்கிய அப்பீல் வழக்குகளில் ஒன்று. அநேகமாக அப்பீல் செய்த எல்லா மில்களுக்கும் தற்காலிக நிறுத்தி வைப்பு உத்தரவு தரப்பட்டுள்ளது. எல்லா மில்கள் பற்றியும் ஆகஸ்ட் 2-ல் நடைபெறப் போகும் விசாரணையில் அனுமதிக்கப்பட்ட தற்காலிக நிறுத்திவைப்பு உத்தரவு நீடிக்க வேண்டுமா கூடாதா என்பது முடிவு செய்யப்படும். நிறுத்திவைப்பு உத்தரவு தரப்படவில்லையானல், தீர்ப்பு அமுலாகும். நிறுத்திவைப்பு மனு ஏற்றுக் கொள்ளப்பட்டால் அப்பீல் விசாரணை முடியும்வரை தீர்ப்பு ஒத்திவைக்கப்படும். நிறுத்தி வைப்பு மனுபற்றிய விசாரணை மட்டும் 2-8-54ல் நடைபெறும் என்று பதிவு அதிகாரி தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் அலுவலகத்திற்குத் தெரிவித்துள்ளார். நஷ்டஈடு பிரச்னைபற்றிய அப்பீல் மனு இன்னும் பதிவு செய்யப்படவில்லையாதலாலும், அதற்கு இன்னும் ஏற்பாடுகள் ஆகவில்லையாதலாலும், அதை இப்போது விசாரணைக்கு எடுத்துக்கொள்ள முடியாது என்று தமிழ்நாடு தொழிற் சங்க காங்கிரசுக்குத் தெரிவித்துள்ளார். லக்ஷ்மி குரூப் மில்களிலும், மதுரை ராஜேஸ்வரி, உடுமலைப்பேட்டை மில்களிலும், திருப்பூரில் 2 மில்களிலும், பீளமேடு மில்களிலும், ஞானம்பிகா மில்லிலும், திருச்செங்கோடு புள்ளிக்காரா மில்லிலும்—இதுபோன்ற சில மில்களில் நஷ்டஈடு ஏற்கெனவே கொடுக்கப்பட்டாய்விட்டது என்பது குறிப்பிடத்தக்கது. விதிகளின் இதர அம்சங்கள் பற்றியும், விசாரணை நடவடிக்கையைப்பற்றியும் அடுத்த கட்டுரையில் எழுதுகிறேன்.

## மைலாப்பூர் கபே தொழிலாளர் வெற்றி

சென்னை மைலாப்பூர் கபே மூடப்பட்டதால் 75 தொழிலாளர்கள், ஹோட்டலுக்குள் இருந்து சத்யாக்ரஹம் செய்ததையும், அவர்களில் 33 பேர்களை காமராஜ் சர்க்காரின் "காருண்ய"ப் போலீஸாரால் கைது செய்யப்பட்டு சிறையிலடைத்ததையும் தமிழ் மக்கள் முன்பே அறிவார்கள்.

சுமார் 1½ மாதங்களுக்குப் பிறகு ஜூலை 20, 21தேதிகளில் ஹோட்டலை புதிதாக ஆரம்பித்துள்ள புதிய நிர்வாகஸ்தர்களுடன் த. நா. தொழிற் சங்க காங்கிரஸ் ஆபீஸ் காரியதரிசி ஆர். சங்கர நாராயணன் பேச்சு வார்த்தைகள் நடத்தினர். அதன் பேரில்,

★ 45 பழைய தொழிலாளர்கள் வேலைக்கு வைத்துக் கொள்ளப்படுவார்கள்.

★ மேற்கொண்டு தேவைப்படும் தொழிலாளர்களை, வேலையிழந்த பழைய தொழிலாளர்களிலிருந்துதான் எடுத்துக்கொள்ளப்படும் என்று வாக்குறுதி யளித்துள்ளார்கள்.

22-7-54 முதல் ஹோட்டல் திறக்கப்பட்டு வேலை நடந்து வருகிறது.

## சமாதானம் வென்றது

(முதல் பக்கத் தொடர்ச்சி)

வாபஸ் வாங்கப்படும். இது தற்காலிக ஏற்பாடுதான்.

1956 ஜூலையில் வியத்நாம் பூராவிலும், வயது வந்த வாக்காளர்களை அடிப்படையாகக் கொண்ட தேர்தல் நடக்கும். தேர்ந்தெடுக்கப்படும் சர்க்காரின் ஆட்சியின் கீழ் வியத்நாம் பூராவும் விடப்படும். பிரெஞ்சுத் துருப்புகள் அங்கு நீடித்து இருப்பதா இல்லையா என்பதை தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை முடிவு கட்டும்.

வியட்நாமைப் போலவே, லாவோஸிலும், கம்போடியாவிலும் உடனடியாக யுத்த நிறுத்தம் அமுலாகும். 1955லேயே இந்த இரு நாடுகளிலும் தேர்தல் நடந்து, மக்கள் கையில் அதிகாரம் ஒப்படைக்கப்படும்.

இந்த மூன்று ராஜ்யங்களும் ஐ.நா. கொள்கை விரோதமான எந்த ராணுவக் கூட்டணியிலும் சேரக்கூடாது ராணுவ தளங்களை மற்ற நாடுகள் அமைப்பதற்கும் அங்கு இடமளிக்கக் கூடாது.

யுத்த நிறுத்தத்தை மேற்பார்வையிட்டு, தேர்தலை நடத்தும் பொறுப்பை ஒரு சர்வதேச கமிஷனுக்கு விடப்பட்டுள்ளது. இதில் போலந்து, கனடா, இந்தியா உள்ளன.

இந்த ஒப்பந்தத்தின்படி நடக்க உறுதியளிக்க ஜெனிவாவில் கூடிய அமெரிக்கா தவிர மற்ற எட்டு நாடுகளும் ஒப்புதல் தெரிவித்தன. தனது யுத்த வெறி முயற்சியில் தோற்ற, இந்தோ-சீனவை ஆக்கிரமிப்பதில் படுதோல்வி அடைந்த, அமெரிக்கா தனியாக ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளது. தனக்கு இந்த ஒப்பந்தம் பிடிக்காவிட்டாலும் இதைச் சீர்குலைக்கும் விதத்தில் எவ்வித பலாத்கார நடவடிக்கையும் எடுப்பதில்லை என்று அமெரிக்க ஏகாதிபத்தியம் அறிவிக்கிறது. இந்த அறிவிப்பை வெளியிட்ட அதே சமயத்தில், பாகிஸ்தானில் அமெரிக்க ராணுவ ஆலோசனைக் குழு ஒன்றை அமெரிக்கா-பாக் ஒப்பந்தத்தின் பிரகாரம் நியமித்துள்ளதாகவும் அறிவிக்கிறது. தென் கிழக்காசியக் கூட்டணிக்கு எஞ்சியுள்ள சயாம் பிலிப்பைன்ஸ் போன்ற கைப்பாவைகளைச் சேர்த்துக்கொண்டு இனி தீவிர முயற்சி செய்யப் போவதாகவும் அறிவித்துள்ளது.

அமெரிக்காவின் சொல்லும் செயலும் வெவ்வேருனவை என்பதே இவ்வித முறை.

அதனலேயே சமாதான ஆர்வம் கொண்ட மக்கள் விழிப்புடனிருப்பது மிக மிக அவசியம். இந்தோ-சீன ஒப்பந்தத்தை கடுகளவும் மீருமல் அமுல் நடத்த வற்புறுத்துவதுடன், அமெரிக்காவின் புதிய புதிய சட்ட திட்டங்களையும் முறியடித்தாக வேண்டும் என்பதையும் மறந்துவிடக் கூடாது.

இத்துடன் உலகில் சமாதானம் மேலும் வளர்ந்தோங்க மலேயா, கென்யா, டியூனிஷியா ஆகிய நாடுகளில் ஏகாதிபத்யங்கள் நடத்தும் அநியாய காலனி யுத்தங்களும் நிறுத்தப்படவேண்டும்.

—கே. எம்

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

விடமிருந்து 2,70,000 டன் அரிசி வாங்கிக் கொள்வதாக நாம் செய்து கொண்டிருக்கும் ஒப்பந்தத்தை முறிக்கவேண்டுமென்றும், ஆனல் அதே சமயம் நம்மிடமிருந்து 50,000 டன் ரப்பரை வாங்குவதற்காக சீன செய்துகொண்டிருக்கும் ஒப்பந்தம் மட்டும் நீடிக்க வேண்டுமென வற்புறுத்த வேண்டுமென்றும் இலங்கைப் பிரதமரிடமிருந்து எனக்கு உத்தரவுகள் கிடைத்தபொழுது, நான் சற்றும் ஆச்சர்யப்படவில்லை."

இதர நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் அமெரிக்கா தலையிடுவதற்கு இதைக்காட்டிலும் தலைசிறந்த உதாரணம் வேறு என்ன இருக்க முடியும்? அமெரிக்க 'உதவி'யின் உண்மையான நோக்கங்கள் என்ன என்பதைப் பற்றி பண்டித நேருவின் கண்களைத் திறப்பதற்கு இதைக்காட்டிலும் மிகச் சிறந்த எடுத்துக்காட்டு வேறு என்ன இருக்க முடியும்?

## நம்பியார், கே. டி. ராஜு

## சோவியத் யூனியனுக்குப் புறப்பட்டனர்

பம்பாய், ஜூலை. 20—

சோவியத் ரயில்வே போக்குவரத்து தொழிற் சங்கத்தின் அழைப்பை ஏற்று தென் பிராந்திய ரயில்வே லேபர் யூனியன் பொதுக்காரியதரிசி தோழர் கே. அனந்த நம்பியார், எம்.பி.யும், லேபர் யூனியனின் சி.இ.சி. உறுப்பினரான தோழர் கே.டி. ராஜு, எம்.எல்.ஏ.யும் இன்று இரவு ஆகாயவிமானத்தின் மூலம் மாஸ்கோ பிரயாணமானர்கள்.

# காங்கிரஸின் சர்வாதிகாரி

# காமராஜரை முறியடிப்போம்!

## வெள்ளித் தோட்டா குவியட்டும்

தமிழ்ப் பெருங்குடி மக்களே!

வருகிறது ஆகஸ்டு 1-ம் தேதி! அன்று பட்டினிச் சாவையும் வேலையில்லாக் கொடுமையையும் கட்டிக் காத்து வரும் காங்கிரஸ் ஆட்சியின் முதலமைச்சர் காமராஜ் ஜெயிப்பதா? அல்லது விபரம் தெரிந்த நாள் முதலாக உழைப்பாளி மக்களுக்கே தன்னை அர்ப்பணித்துள்ள கம்யூனிஸ்ட் தலைவர் கோதண்டராமன் வெற்றி பெறுவதா? என்ற கேள்விக்கு குடியாத்தம் மக்கள் பதில் சொல்லும் நாள் வருகிறது.

### தி க-தி மு க முதல் பிராமண மஹாசபை வரை

தமிழகத்திலுள்ள சகல பண மூட்டைகளும் பிற்போக்கு சக்திகளும் காமராஜரை ஆதரித்து நிற்கின்றன. தி.க. தலைவர் ஈ. வே. ரா.வின் பகிரங்க ஆதரவும், தி. மு.க. ஏடுகளின் மறைமுக ஆதரவும், சென்னை ராஜ்ய பிராம்மண மஹா சபையின் ஆதரவும், மற்றும் சர். பி. டி. ராஜன் போன்ற பெரிய நிலப்பிரபுத்வ, முதலாளித்வ திமிங்கிலங்களின் ஆதரவும், சர்க்கார் அதிகாரிகளின் ஆதரவும் காங்கிரஸ் சர்வாதிகாரி காமராஜருக்கு உண்டு. பச்சை நோட்டுகளும், பெட்ரோல் டின்களும், மோட்டார் கார்களும் தண்ணீர் பட்ட பாடாயிருக்கிறது.

இதை எதிர்த்து தொழிலாளர் தலைவர் கோதண்டராமன் நிற்கிறார். காமராஜரைத் தோற்கடிக்க பார்ப்பன பஸ் முதலாளி பெரிய தொகை ஒன்றை செக் மூலமாக அனுப்பியிருப்பதாகவும், இந்த செக் வேலூரில் தொங்கிக்கொண்டிருப்பதாகவும், மவுண்ட்ரோடு மகாவிஷ்ணு என்ற ஆரிய முதலாளியும் பெருந்தொகை கொடுத்துவிட்டதாகவும் தி. க. பத்திரிகை விடுதலை தலையங்கம் தீட்டுகிறது. கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளைக்கு என்பார்கள். ஆகஸ்டு முதல் தேதிக்குள் பலிப்பதற்கு என்னென்ன புளுகுகள் புளுகித் தள்ள வேண்டுமோ அவ்வளவும் புளுகி வைக்கிறார்கள். அப்புறம் பொய் என்று தெரிந்தால் சந்தி சிரிக்குமே என்பதைப் பற்றி அவர்களுக்குக் கவலையில்லை. நமக்குப் பணம் கொடுக்கக்கூடிய முதலாளிகளும் மஹா விஷ்ணுகளும் யார் யார் என்பதை இதோ கூறுகிறோம்!...

### வெள்ளித்தோட்டா குவிகிறது!

காங்கிரஸ் ஆட்சியின் தலைமை பீடத்துக்கு வேட்டு வைக்கப் போகிறோமென்ற உற்சாகத்துடன் ராஜ்யம் முழுவதுமிருந்து ஆயிரக்கணக்கான வெள்ளித் தோட்டாக்கள் பாய்ந்தவண்ணமிருக்கின்றன, வடாற்காடு ஜில்லா முழுவதுமுள்ள மில் தொழிலாளர்கள், பீடித்தொழிலாளர்கள், மதுமாத் தொழிலாளர்கள், தோல் ஷாப் தொழிலாளர்கள், விவசாயிகள், வியாபாரிகள், மாணவர்கள் 5, 10, 20, 50, 100 என்று அனுப்பிக்கொண்டேயிருக்கிறார்கள். எல்லா ஜில்லாக்களிலிருந்தும், பணமாகவும், நோட்டீஸ்களாகவும் குடியாத்தத்துக்கு உதவி விரைகிறது. சென்னையிலிருந்து ஆழ்வார்பேட்டை, ராயப்பேட்டை, நம்மாள்வார்பேட்டை, நேரு பதிப்பகத்தார் முதலிய இடங்களிலுள்ள கட்சி யூனிட்டுகள் 15,000 நோட்டீஸ்கள் அச்சடித்து அனுப்பியிருக்கிறார்கள். காமராஜ் வெற்றி ஆச்சாரியார் தோல்வி என்ற முறையில் தி.மு.க. தலைவர்கள் சித்தரிக்க முயன்றாலும், காமராஜ் வெற்றி காங்கிரஸ் வெற்றி, மக்களின் தோல்வி என்பதை நன்கறிந்த தி.மு.க. ஊழியர்கள் பலரும் கோதண்டராமன் வெற்றிபெற தம்மாலான பண உதவி செய்திருக்கிறார்கள். திரு-கொச்சியில் வண்டிப் பெரியாரைச் சேர்ந்த தோழர்கள் இந்து-முஸ்லீம் பொது மக்களிடம் கையேந்தியபோது ரூ. 16-10-0 வசூலாகியது. எம். எஸ். எம். கனி, எஸ். சாகுல் ஹமீது, கே. எஸ். முகமது ஷரீப், கனிபா ராவுத்தர், வா. அப்துல் வஹாது, எஸ். எம். அபூபக்கர், வி. ஏ. நசீர், சையது மகமது, பாச்சா, முகமதலி, வி.ஏ. அப்பாஸ், கே. கே. சையத் மகமது வி. ஆர். எம். பேக் சாகிப், யு. எம். கனிபா முதலிய முஸ்லீம் மக்கள் ஒரு ரூபாய், எட்டணா என்று நிதி தந்திருப்பதின் மூலம், குடியாத்தம் லீக் தலைவர்களின் பொய்ப் பிரசாரத்துக்கு பதில் கொடுத்திருக்கிறார்கள். இதேபோல் சென்னை தாஜ்மஹால் பீடித் தொழிலாளர்கள் கொடுத்திருக்கிறார்கள். போதிய இடமின்மையால் சகல பெயர்களையும் வெளியிட இயலவில்லை.

இந்த நிதி போதாது. இன்னும் எவ்வளவோ தேவைப்படுகிறது. நாட்களோ நாலைந்துதான் உள்ளன. தேர்தலன்று ஊழியர்களை அனுப்ப நிறைய பணம் தேவை. இதுவரை தாராளமாகத் தந்துதவிய தோழர்களுக்கு நன்றி. வசூலித்து அனுப்பிய தோழர்களுக்கும் நன்றி. தேர்தல் வசூல் புதிய புதிய பகுதிகளிடத்தும் சென்று வசூலித்து குடியாத்தத்தில் வெற்றி காண்பீர்களென ஆவலுடன் எதிர்பார்க்கிறோம்.

காங்கிரஸ் சர்வாதிகாரி காமராஜரையும், அவரைத் தாங்கிநிற்கும் பிற்போக்கு சக்திகளையும் முறியடித்தோமென்ற பெருமைக்கு போட்டிபோடுங்கள்.

# குடியாத்தம் தாலுக்கா தாழ்த்தப்பட்டோர் பெடரேஷன்

## தாலுக்கா கமிட்டி செயலாளர் அறிக்கை

குடியாத்தம் தாலுக்கா உபதேர்தலில் தாழ்த்தப்பட்ட மக்களிடையே சிலர் குழப்பத்தை ஏற்படுத்தும் நோக்கத்துடன் பொய் பிரச்சாரத்தை செய்து வருகிறார்கள்.

குடியாத்தம் தாழ்த்தப்பட்டோர் பெடரேஷன் நிர்வாகக்குழுவினரும் தாலுக்கா சம்மேளன முக்யஸ்தர்களும் 9-7-54 மாலை 6 மணிக்கு பிச்சனூர் இரவு பாடசாலையில் P. A. லிங்கமுத்து அவர்கள் தலைமையில் கூடி ஏகமனதாக கீழ்கண்ட தீர்மானங்களை நிறைவேற்றி யுள்ளார்கள்.

1. அகில இந்திய தலைவர் உயர் திரு. என். சிவராஜ், பி.ஏ., பி.எல்., விடுத்த அறிக்கைப்படியும் 23—6—54 வட ஆர்காடு ஜில்லா பெடரேஷன் அட்ஹாக் கமிட்டியில், M. கிருஷ்ணசாமியை பெடரேஷன் அபேக்ஷகராக தேர்ந்தெடுக்கப்பட்டதான ஜில்லா காரியதரிசி பி. வாசுதேவன் தெரிவித்த உத்தரவுப்படியும் M. கிருஷ்ணசாமியை பெடரேஷன் அபேட்சகராக தாலூகா கமிட்டியில் ஏகமானதாக அங்கீகாரம் செய்யப்பட்டது.

2. அகில இந்திய தாழ்த்தப்பட்டோர் பெடரேஷனின் அடிப்படை கொள்கையில் காங்கிரசும், காங்கிரஸ் சர்க்காரும் தாழ்த்தப்பட்ட மக்கள்பால் அனுஷ்டிக்கும் திட்டத்தை இதுவரை எதிர்த்தே வந்திருக்கிறது. இதன் படியே நமது ஒப்புயர்வற்ற மாபெரும் தலைவர் டாக்டர் அம்பேத்கார் காங்கிரசை எதிர்த்து தேர்தலில் நின்ற அடிப்படைக் கருத்துடனும் நமது அரசியல் கொள்கைகளை விட்டுக் கொடுக்காமல் காங்கிரஸை எதிர்த்து முறியடிக்க இரட்டை ஓட்டு முறை உள்ள இந்தத் தொகுதியில் கம்யூனிஸ்ட் கட்சியுடன் தேர்தல் ஒப்பந்தம் செய்துகொண்டு இந்தத் தேர்தலில் வெற்றி பெறுவதற்கான சகல முயற்சிகளையும் செய்வதென தாலூகா கமிட்டியில் ஏகமனதாக தீர்மானிக்கப்பட்டது. ஆகவே சமூகத்தில் குழப்பத்தை உண்டு பண்ணும் புல்லர்களின் மாய்மாலப் பேச்சிற்கு இரையாகாமல் சம்மேளனத்தின் ஆணைக்குக் கட்டுப்பட்டு ஒரு தாய் வயிற்று பிள்ளைகள்போல், சமூக முன்னேற்றத்தைக் கருதி M. கிருஷ்ணசாமிக்கு யானை பெட்டியில் ஓர் ஓட்டும், V. K. கோதண்டராமனுக்கு கதிர் அரிவாள் பெட்டியில் ஓர் ஓட்டும் போட்டு வெற்றியடையச் செய்ய வேண்டுகிறேன்.

C. குப்புசாமி,
குடியாத்தம் தாலுக்கா
தா. பெடரேஷன் செயலாளர்,
வ. ஆ. ஜில்லா பெடரேஷன்
தேர்தல் அட் ஹாக் கமிட்டி
மெம்பர்.

# குடியாத்தம் தேர்தல்

## 2-வது வாரத்தில்

கட்சி அபேட்சகர் கோதண்டராமனையும், தாழ்த்தப்பட்டோர் சம்மேளன அபேட்சகர் கிருஷ்ணசாமியையும் ஆதரித்து, தோழர்கள்: எஸ். இராமகிருஷ்ணன், மோகன் குமாரமங்கலம், முகவை இராஜமாணிக்கம், விருதுநகர் எஸ். உலகநாதன், பரிபேக் மாரியப்பன் முதலியவர்கள் குடியாத்தத்திலும் பல கிராமங்களிலும் பேசினார்கள்.

சட்டசபை எதிர்க்கட்சித் தலைவர் பி. ராமமூர்த்தி, ஏழாண்டு காங்கிரஸ் ஆட்சியில் மக்கள் படும் கஷ்டங்களையும்—சட்ட சபையில் கம்யூனிஸ்டு அங்கத்தினர்கள் நடத்திய போராட்டங்களையும் விவரித்தார்.

எல்லூரிலிருந்து ஆந்திரக்கட்சி அனுப்பிய புர்ரகதா கலா கோஷ்டி தெலுங்கு பேசும் மக்களிடம் கலா நிகழ்ச்சி மூலம் ஆகர்ஷித்து வருகிறது. வேலூரிலிருந்துவந்த தமிழ் கலா கோஷ்டி "காட்டு ராஜா தர்பார்" என்ற கலா நிகழ்ச்சி நடத்துகிறது.

கோவை, கோலார், செங்கம் கட்சி யூனிட்டுகள் 3 மைக்குகள் அனுப்பியுள்ளன.

தினம் 50 சைக்கிள்களில் செந்தொண்டர்கள் பிரச்சாரத்துக்குக் கிளம்புகிறார்கள்.

இந்து-முஸ்லீம் தொண்டர்கள் தீவிரப் பிரச்சாரம் செய்து வருகிறார்கள். செங்கொடிகள் ஏற்றுவதில் குடியாத்தம் நகரின் ஒவ்வொரு வார்டும் போட்டி போடுகிறது.

தமிழகம் முழுவதும் உடனே பணம், நோட்டீஸ், போஸ்டர் போன்ற பல வழிகளிலும் உதவி செய்வதில் முனைந்து நிற்கவேண்டும். தாமதம் கூடாது.

நிதி அனுப்புவோர்:

டாக்டர் ஜி. கண்ணபிரான்
கம்யூனிஸ்ட் கட்சி,
குடியாத்தம்
என்ற விலாசத்துக்கு அனுப்பவும்.

# குடியாத்தம் உபதேர்தல் நிதி

(குடியாத்தம் தேர்தல் காரியாலயத்திலிருந்து நமக்கு கிடைத்த வசூல் விபரங்களை கீழே பிரசுரிக்கிறோம்)

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| 7—7—54 தேதி வரை வசூல் வரவு ரூ. | 536 | 10 | 4 |
| மில் தொழிலாளர்கள் | 322 | 8 | 0 |
| குடியாத்தம் பீடித் தொழிலாளர்கள் வசூல் | 98 | 8 | 0 |
| குடியாத்தம் முனிசிபல் தொழிலாளர்கள் வசூல் | 6 | 8 | 0 |
| குடியாத்தம் பொதுக்கூட்டத்தில் வசூல் | 6 | 12 | 0 |
| மு. அருணாஜலம், அரியலூர் யூனிட்மூலம்: டி. ஏ. ராமையா வசந்த் ஐஸ் ஹவுஸ், 3-0-0, மு. அருணாஜலம் யூனிட் காரியதரிசி 2-8-0, வி. கணபதி. ரயில்வே ஸ்டேஷன் 1-0-0, கே. முனிசாமி ஐயர் ஆஸ்பத்திரி 0-8-0, அ. ராஜு படையாட்சி 0-8-0, எல். கணபதி, டைலர் பெரிய கடைவீதி 0-8-0 ஆக வரவு | 8 | 0 | 0 |
| கரூர் டவுன் கமிட்டி மூலம் வரவு | 5 | 0 | 0 |
| கரூர் மில் யூனிட் மூலம், உட்பிடமங்கலம் சந்தை வசூல் | 5 | 4 | 0 |
| அரக்கோணம் யூனிட், பி. காதர் மோதின் மூலம் வரவு | 25 | 0 | 0 |
| கரூர் ம. ராமசாமி டைலர் மூலம் வரவு | 3 | 8 | 0 |
| டி. ஜே. பாளையம் 8. ராமசாமி ரூ. 2, வரதராஜன் 8 அணா | 2 | 8 | 0 |
| சென்னை ஏ. பி. அச்சக தொழிலாளர்கள் வரவு | 10 | 0 | 0 |
| ஆர். வி. ஏழுமலை, வந்தவாசி வசூல் | 2 | 4 | 0 |
| சிவகிரி யூனிட் மூலம், கே. வி. சங்கர் 5-0-0, இரண்டு அனுதாபி 7-0-0, ராமசாமி 3-0-0 ஆக வரவு | 15 | 0 | 0 |
| சி. மதனகோபால் பிள்ளை | 2 | 0 | 0 |
| வேலூர் வி. அப்கல் ஜப்பார் பீடித் தொழிலாளர்கள் | 277 | 15 | 0 |
| வேலூர் எல். ஆர். கே. தங்கவேல் பீடித் தொழிலாளர்கள் | 36 | 13 | 6 |
| வேலூர் எஸ். பி. பீடித் தொழிலாளர்கள் | 23 | 2 | 0 |
| ஜவஹர் பீடி பேக்டரி தொழிலாளர்கள் | 45 | 7 | 0 |
| வேலூர் சம்மத் பீடி பேக்டரி தொழிலாளர்கள் | 7 | 0 | 0 |
| வேலூர் சிவம் பீடி பேக்டரி தொழிலாளர்கள் | 4 | 0 | 0 |
| வேலூர் பொதுமக்களிடம். வேலூர் டவுன் கமிட்டி வசூல் | 225 | 8 | 0 |
| காட்பாடி யூனிட் மூலம் வசூல் | 75 | 0 | 0 |
| திரு-கொச்சியை சேர்ந்த வண்டி பெரியாரி தோழர்கள்: வி. ஏ. நசீர் மூலம், எம்.எஸ். எம். கனி 1-0-0, சையது முகமது 0-8-0, எஸ். சாகுல் ஹமீது 1-0-0. கே. எஸ். முகமது சரீபு 1-0-0, கனிபா ராவுத்தர் 1-0-0, ஹ. அப்துல் வஹாது 1-0-0 எஸ். வீரவத்ர ஆச்சாரி 1-0-0, எஸ். கைலாச நாடார் 1-0-0, எஸ். எம். அபு பக்கர் 1-0-0, பாச்சா 0-8-0, டி. குருசாமி (வாளையடி) 0-8-0 முஹம்மத் அலி, வி. ஆறுமுக நாடார், வி.ஏ. அப்பாஸ், சின்னுத்தேஹ் (வாளையடி), நல்லப் நாயுடு, கே. கே. சையது முஹமது, தங்கராஜ், வி. ஆர். எம். பேக்சாகிப், வி. எம். கனிபா, ஆர். பரமசிவன் டைலர், பி. கிருஷ்ணன், முத்துமாடன் (இஞ்சி காடு) தலா 0-8-0, வி. ஏ. நசீர் 0-14-0, வி. வேல்சாமி 0-4-0 ஆக வசூல் | 16 | 10 | 0 |
| பள்ளிபட்டி யூனிட், சார்பில் தோழர் நாச்சிமுத்து மூலம் | 1 | 0 | 0 |
| கோயமுத்தூர் ஜில்லா காடையம்பட்டி முற்போக்கு வாலிபர் சங்கத்தின் மூலம் பி. என். பாலு வசூல் | 3 | 0 | 0 |
| மாயூரம் தாலுக்கா தலைஞாயர் வட்டார விவசாயிகள் சங்கத்தின் சார்பாக தோழர் ராஜாங்கம் மூலம் | 5 | 0 | 0 |
| ஈரோடு, தனலக்ஷிமி ஓட்டல் சார்பிலும், மற்றும் தோழர்களிடமும், ஈ. என். ராமமூர்த்தி வசூல் | 10 | 0 | 0 |
| ஈரோடு, வி எஸ். இரங்கசாமி காரியதரிசியின் மூலம் | 5 | 0 | 0 |
| சென்னிமலை, ரா. கிருஷ்ணன் மூலம் | 5 | 0 | 0 |
| வி. எம். ஜிக்கிரியா சாகிப், ராம்பேட்டை | 10 | 0 | 0 |
| அடுப்பதி முன்னேற்ற இளைஞர் மன்றம், தோழர் மா. தங்கவேல் மூலம் | 1 | 0 | 0 |
| நாகூர், ராதாகிருஷ்ணன் | 2 | 0 | 0 |
| சேலம், ஜவஹர் மில் தோழர்கள் மூலம் 3-0-3, கஸ்தூரி ரெங்கன் மூலம் 1-0-0 ஆக தோழர் ஜி சாமுவேல் மூலம் | 4 | 0 | 3 |
| தாம்பரம், கோதண்டன் மூலம், நேஷனல் கேப் ஓட்டல் தோழர்கள் | 4 | 0 | 0 |
| இராயபுரம், வடசென்னை பாஷித் சாயபு மூலம் அனுதாபிகள் தொகை | 14 | 0 | 0 |
| குடியாத்தம் வியாபாரிகளிடம் வசூல் | 162 | 4 | 0 |
| குடியாத்தம் உண்டியல் மூலம் வசூல் | 8 | 8 | 0 |
| குடியாத்தம் முஸ்லீம் மாதர்கள் ஷாஜாதி மூலம் வசூல் | 5 | 0 | 3 |
| ஒரு அனுதாபி எஸ். ராமகிருஷ்ணன் மூலம் | 25 | 0 | 0 |
| ஜனசக்தி அச்சக தோழர்கள், எஸ். ஆர். கே. மூலம் | 5 | 0 | 0 |
| ராயல் பிரிண்டிங் தொழிலாளிகள் | 1 | 0 | 0 |
| சிந்தாதிரிப்பேட்டை, அடியோடி | 1 | 0 | 0 |
| ராயப்பேட்டை ஓ. எம். ரஹீம் | 1 | 0 | 0 |
| ஆற்காடு யூனிட் மூலம் மலேயா சாம்பசிவம் மூலம் | 70 | 0 | 0 |
| செங்கம் யூனிட் ஆர். ராமசாமி மூலம் | 42 | 0 | 0 |
| திருவண்ணாமலை யூனிட் டி. எம். குப்புசாமி மூலம் | 15 | 0 | 0 |
| வேலூர் டவுன் கமிட்டி மூலம் வசூல் | 137 | 0 | 0 |
| சென்னையில் தோழர் ஜீவா மூலம் | 100 | 0 | 0 |
| வேலூர் விடுதம்பட்டி ஒரு விவசாய தோழர் திருமணத்தின்போது | 2 | 0 | 0 |
| அக்ராவரம் இஸ்மாயில் சகோதரருக்கு விசேஷத்தின்போது | 3 | 0 | 0 |
| வேலூர் திருமணம் தோழர் சுப்பிரமணி | 2 | 0 | 0 |
| ரங்காபுரம் பீடித் தொழிலாளி தோழர் கன்னியப்பன் திருமணத்தின்போது | 1 | 0 | 0 |
| கிருஷ்ணாவரம் பீடித்தொழிலாளிகள் இருவர் திருமணத்தின்போது | 5 | 0 | 0 |
| 21-7-54க் தேதிவரை மொத்த வசூல் ரூ. | 2341 | 0 | 6 |

### வசூல் செய்யப்பட்டு தற்சமயம் நம் வசம் உள்ளது

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| ஜனசக்தி பிரஸ் யூனிட் தோழர் ஜெயராமன் மூலம்: தோழர்கள் ராகி 3-0-0, [ஜனார்த்தனம், பாஸ்கரன், ரங்கநாதன், தமிழ் ஒளி தலா ரூ. 1, கேசவலு அணா 8 ஆக மொத்த வசூல் | 7 | 8 | 0 |

Regd. No. M. 5934

Edited, Printed & Published by G. ALAVANDAR, at Janasakthi Press, Subodhaya Buildings, 38, Mount Road Madras-6.
OFFICE: 3, Anthony Street, Madras-14.